## தாது புஷ்டியில் மன்மதனுக்கு ஒப்பாவீர்கள்.

நீங்கள் என்று மழியாத இளமைப் பருவத்தை அடையவேண்டுமானால்

பழனி ஆர் எம். கே.

# தங்க பஸ்பம்

## நரசிங்க லேகியத்தில் சாப்பிடுங்கள்.

### தாதுபுஷ்டிக்கு இதற்கு நிகரான மருந்து ஒன்றுமே இல்லை.

இது பிரபுக்கள் சாப்பிட வேண்டிய மருந்து. மற்றவர்கள் சாப்பிட்டு தாங்கமுடியாது.

ஒரே வேளையில் கொடுக்கும் பலனைப் பார்த்தால் உங்கள் மனதை அப்படியே கவரச் செய்துவிடுகிறது.

### தாதுபுஷ்டியில் மன்மதனேவென மயங்குவார்கள்.

இதிலடைந்திருக்கும் ஓர் ரகசியம், அபூர்வசக்தி உபயோகித்தவர்களுக்குத்தான் தெரியும்.

இதை காலைமாலை நோய் பலம்போல் 1 அல்லது 2 மண்டலம் உட்கொண்டால் வெகு சீக்கிரத்தில் தாதைக் கட்டி வீரியத்தையும் பலத்தையும் கொடுத்து இழந்துபோன ஆண்மைத்தனம் முழுமையும் திரும்பிவரும்படி செய்கிறது. இக்குணம் இதிலமைந்திருப்பது மகா ஆச்சரியமாயிருக்கிறது. இப்படியும் ஒரு மருந்துண்டா வென்று பிரமிக்கச்செய்கிறது. தாதுவைக்கட்டி இல்வாழ்க்கையில் இன்பத்தைக் கொடுத்து பால்யம், யௌவனம், விருத்தாப்பியம் இந்த பருவங்களில் அடையவேண்டிய காலத்திற்குமுன் அடைந்த விபரீதங்களை நிவர்த்தி செய்யும். கிழத்தனத்தை நீக்கி வல்லமையடையச் செய்வதில் பேர்பெற்றது. நீரழிவு, பிளவை, குன்மம், காசம், க்ஷயம், ஈளை இருமல், கஷ்ட சுவாசம், கோழை, கபக்கட்டு, கிரந்தி முதலிய சகல வித கர்ம வியாதிகளும் தீரும். தளர்ந்துபோன நரம்புகளுக்கு முறுக்கேற்றும் வீரியத்தைக் கெட்டிப்படுத்தி, ஆண்மைக் குறைவை நீக்கி தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு மிஞ்சின ஔஷதமில்லை. 100 நாளைக்கு தங்க பஸ்பமும் நரசிங்க லேகியமும் ரூபாய் 100; 50 நாளைக்கு ரூபா 50; 25 நாளைக்கு ரூபாய் 25. சிங்கப்பூர் வாசிகள் சார்ஜுக்கு ரூபா 2-ம் சேர்த்து முன் பணம் அனுப்பவேண்டும்.

## புத்திர சந்தானம் உண்டாகி விட்டது.

நற்சாக்ஷி :—எனக்கு விவாஹம் நடந்து ஆறுவருடம்வரை புத்திர சந்தான மில்லாமலிருந்தது. தங்கள் தங்க பஸ்பமும், நரசிங்க லேகியமும் தருவித்து 25 நாட்கள் சாப்பிட்டதில் என் குறைகள் பூராவும் தீர்ந்து, புத்திரசந்தான முண்டாகிவிட்டது. இந்த உண்மையை உலகத்தாருக்கு எடுத்தோத முன் வந்திருக்கிறேன். இம்மருந்துகள் தேவ ஔஷதங்கள் என்று சொல்வது மிகையாகாது. சரீர திடத்தையோ, புத்தி கூர்மையையோ, மனமகிழ்ச்சியையோ, மேலாய புத்திரப்பேற்றையோ விரும்பும் ஒவ்வொருவரும் இம் மருந்துகளை வாங்கிச் சாப்பிட்டால் நினைத்தது லபிக்குமென்பதே எமது துணிபு. தாங்கள் நீண்ட ஆயுளைப் பெற்றுவாழ எல்லாம் வல்லபிரான் இன்னருள் புரிவாராக.

(ஒப்பம்) நல்லதம்பி, கட்டுப்பட்டை, சிலோன், 22-2-27.

## தங்க பஸ்பம் மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா.

### இழந்துபோன ஆண்மையைத் திரும்பக்கொடுக்கும், இல்லறவாழ்க்கையில் இன்பத்தைக் கொடுத்து தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு மிஞ்சின ஔஷதமில்லை.

மேகரோகம் கொடியவியாதி இல்லாதவர்கள் தாதுபுஷ்டி, சரீரதிடம் அடைய தங்க பஸ்பத்தையும் அனுபானம் மகாமன்மத காமகேசரி அல்வாவில் சாப்பிடவும். காமகேசரி அல்வாவும், தங்கபஸ்பமும் 100 நாள் மருந்து ரூபாய் 50. 50-நாளைக்கு ரூபாய் 25. 25-நாளைக்கு ரூபாய் 12—8—0.

## புத்திர சந்தானம் உண்டாகிவிட்டது.

ஐயா, எனது நண்பர்களில் ஒருவர் ஆண்தத்துவம் சிறிதுமின்றி மனவருத்தத்துடனிருந்தார். அநேக வைத்தியர்களால் கொடுக்கப்பட்ட பல மேல்பூச்சு மருந்துகள் உபயோகித்தும், அநேக மருந்துகள் சாப்பிட்டும், கொஞ்சம்கூட குணமாகவில்லை. தங்கள் மேன்மை பொருந்தியதும், உயர்ந்த பலனைக் கொடுக்கக்கூடியதும், மதிப்பிடமுடியாததுமான தங்கபஸ்பம், மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா 50-நாள் மருந்தும், கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை 100ம் தருவித்து 15-நாள் சாப்பிட்டதில் பெருமை பாராட்டத்தக்க புதிய சக்தியையும் 10 மடங்கு ஆண்மையையும் கொடுத்துவிட்டது. ஷை வியாதியஸ்தர் பூராமருந்தையும் சாப்பிட்டதில் தனது இழந்துபோன ஆண்மைத்தனம் பூராவையும் பெற்றுவிட்டார். இப்பொழுது ஒரு ஆண் குழந்தையை அடைந்திருக்கிறார். தங்கள் ஞாபகச் சின்னமாக மேற்படி குழந்தைக்கு ''வேலுசாமி'' என்கிற தங்கள் நாமத்தையே சூட்டி அழைத்து வருகிறார்.

V. S. NATANAM, Sub Inspector of Police, South Arcot Dt.,

வைத்திய ஆசிரியர், **ஆர். எம். கே. வேலுசாமி,**

**சித்த வைத்தியசாலை, பழனி.**

குறிப்பு:—இந்த பேப்பரைக்குறிப்பிட்டு எழுதவும்.
''ஆயிரக்கணக்கான சர்ட்டிபிகேட்டுகளடங்கிய நற்சாக்ஷி புக் இனும்.''

---

நேத்ர சஞ்சீவனஞ்சனினால்

## குருடர் கண் பெற்றார்.



இவ்வஞ்சனம், மஹாத்மாக்களால் கண்டு பிடிக்கப்பட்டது. கண்நோவுகள் யாவற்றிற்கும் இது ஓர் இணையற்ற நிவாரணி. இது கண்ணில் சதை படர்தல், கண்வலி, வெள்ளெழுத்து, இரத்தச் சிவப்புள்ள கண்கள் முதலியவற்றைக் குணப்படுத்தும். பல டாக்டர்களும், வைத்யர்களும் இதன் ஆச்சர்ய குணத்தைக் கண்டு வியப்புறுகின்றனர். புட்டி 1-க்கு விலை ரூ. 1-4. 3 புட்டிகளுக்கு ஆர்டர் செய்தால் தபால் சார்ஜ் இனும்.

NETRA SANJIVAN KARYALAYA,
Ghas Bazar, Bombay No. (9)

---

## ஜோதிஷ சக்ரவர்த்தி.

100,0000 ஜனங்களுக்கு மேல் நமது ஜோதிஷ பலனைப் புகழ்ந்திருக்கின்றனர். 250வருஷ ஜோதிஷ பரம்பரை, கத்வால் சமஸ்தான ஜோதிஷர், மஹாராஜாக்கள், பிரபுக்களாலும், தங்க மெடல்களும், நற்சாக்ஷிகளும் பெற்றவர். மாதவாரி 1 வருஷ திரிகால பலனெழுத, ரூ. 2 எதிர்கால 5 கேள்விகளுக்கு ரூ. 1. ஜாதகம் அல்லது எழுதும் நேரம் தேவை, பண்டிட் N. அமிர்தாநந்தா, 2/29 வடக்கு மாடவீதி, மயிலாப்பூர், மதராஸ்.

---

### தமிழ் நூல்கள்.

| | | | |
|---|---|---|---|
| குழந்தைக் கட்டி | 1 | 4 | 0 |
| உலக ரகஸ்யம் | 1 | 0 | 0 |
| மோஹனதாஸ் | 0 | 12 | 0 |
| தியாகராஜ சுவாமிகள் சரிதம் | 0 | 8 | 0 |
| சுகுணவதி | 1 | 0 | 0 |

மானேஜர், சுதேசமித்திரன், சென்னை.

---

# டோங்ரே

அவர்களின்

## பாலாம்ருதம்

பலஹீனமான குழந்தைகளுக்கு பருமனையும், வலுவையும், ஆரோக்கியத்தையும் தரும். எங்கும் கிடைக்கும்.

மதராஸ் ஏஜெண்டுகள் :—

தாமோதர் & கம்பெனி

சைனபஜார் ரோட்,

மதராஸ்.

மூன்று கலர் ஆப்-டோன் லயன் பிளாக்குகள்

வெகு நேர்த்தியாகவும், உயர்ந்தசாமான்களால் செய்து கொடுக்கப்படும்

PENROSE

எம். சி. அப்பாசாமி செட்டி அண் கொ.

போட்டோகிராபர்ஸ், பிராஸஸ் என்கிரேவர்ஸ்

நெ. 64. சவரிமுத்து தெருவு,

மண்ணடி, மதராஸ்.

# கவலே வேண்டாம்.

பல நோய்களினுலும், ஜீவ சக்தி யிழந்து இனி இன்ப வாழ்வை அடைய் முடியுமா என்று தினமும் எங்கும் எக்கத்தை இன்றே விட்டுவிடுங்கள். நீங்கள் காயகற்பம் தின்ருல் நரை திரை நீங்கி நீண்ட காலம் நோயில்லாமல் வாழலாம் என்ற உண்மையைக்கேட்டதில்லேயா? இதோ ஜீவ சக்தி என்னும் அற்புத சக்திவாய்ந்த அனுபவ சித்த கற்பம். (தின்பதற்கு ருசியான லேகிய பாகம். முதலில் தேக நிறையை எடை போட்டுக் கொள்ளுங்கள். 40 வேளே கற்பம் உண்டபின் தேக நிறையதிகரித்திருக்கும். நல்லபசி, ரத்தவிருத்தி, நாம்புகளுக்கு பலம், தாது விருத்தி, நகக்கண்களின் நிறமாற்றம், முகதேஜஸ், கண்களுக்கு ஒளி, நிறைந்த ஞாபக சக்தி, நல்ல தூக்கம் இவை உண்டாகும். எவ்வளவு நடந்தாலும் மூளே உழைப்புச் செய்தாலும் களேப்புத்தோன்ருது. மயக்கம், மலச் சிக்கல், கபால உஷ்ணம், வெட்டை, அலறி ஒடும். நாட்பட உண்டால் நரை திரையும் மாறும். இன்றே சித்தர்களின் கற்பத்தின் மகத்வத்தை அனுபவியுங்கள். புதிய வாலிபமும் புதிய உயிரும் அடைவீர்கள். 40 வேளே கற்பம் புட்டி 1-க்கு ரூ. 3-8-0. தபாற் கூலி வேறு. வெளிநாடு ஆர்டர் மணியார்டருடன் வர வேண்டும்.

ஜீவசக்தி டிபோ, சிந்தாதிரிப்பேட்டை, சென்னே.

அமிர்தாஞ்சனம்

எல்லா நோவுகளுக்கும் திவ்யாமிர்தம்

AMRUTANJAN
SOVEREIGN REMEDY
Best Indian Pain Balm

சென்னே மாகாணத்திற்கு ஏஜண்டுகள்:—
ஷியாம் & கம்பேனி, 6, பந்தர் தெரு, மதராஸ்.

# ஜ க ஜ் ஜா ல ன்.

நாவலாசிரியர் ஸ்ரீமான் எம். என். கணேச ஐயர் எழுதிய ஓர் அரிய பெரிய நூதனமான துப்பறியும் நாவல். ஜகஜ்ஜாலன் என்னும் திருடனுடைய வீரதீர பராக்கிரமங்கள் படிக்கப் படிக்க, ஆச்சர்யமாயிருக்கும்.

518-பக்கங்க்ள் கொண்ட சுத்தப் பதிப்பு. விலே ரூ. 1—12—0

மானேஜர், சுதேசமித்திரன் புத்தகசாலே சென்னே.

# யுனேடெட் இந்தியா லேப் அஷ்யூரன்ஸ் கம்பெனி, லிமிடெட்.

1906-ஞ ஸ்தாபிக்கப்பட்டது. தலைமை ஆபீஸ்: மதராஸ்.

பாலிஸி ஹோல்டர்கள் டிரஸ்ட் நிதி

37-லட்சம் ரூபாய்க்கு அதிகமாயுள்ளது.

டிரஸ்டி: சென்னே கவர்ன்மேண்ட் அபிஷியல் டிரஸ்டி.

பாதுகாப்பும், சேவையும்:—கம்பெனியின் பணத்தைப் பந்தோபஸ்தான முறைகளில் பயன்படுத்திப் பாதுகாப்பதும், பாலிஸி ஹோல்டர்களுக்கு வேண்டிய சௌகரியங்களேச் சிறந்த வகைகளில்செய்வதுமே யுனேடேட் இந்தியாவின் முக்கியக் கருத்து.

யுனேடெட் இந்தியாவைப்பற்றி ஒரு பிரபல பத்திரிகை கூறுவதாவது:—யுனேடெட் இந்தியா தன் பாலிஸி ஹோல்டர்களுக்கு வழங்கும் சௌகரியங்களேயும், பந்தோபஸ்தையும்விட அதிகமாக வேறெந்தக் கம்பெனியும் செய்து தருவது அரிதாகும். இந்தியாவிலுள்ள பற்பல இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளுள் பாலிஸி ஹோல்டர்களுக்கு சௌகரியங்கள் அளிப்பதில் யுனேடேட் இந்தியா மிகவும் உன்னதமான ஸ்தானத்தைவகித்து வருகின்றது."

ஏஜெண்டுகளில்லாத இடங்களில் ஏஜென்ஸி எடுத்துக் கொள்ள விரும்புகிறவாகள் மனுச்செய்து கொள்ளலாம்.

யுனேடெட் இந்தியா அஷ்யூரன்ஸ் பில்டிங்ஸ், செம்புதாஸ் தெரு மதராஸ். } M. K. ஸ்ரீநிவாஸன், ஜெனரல் மானேஜர்.

# இரண்டு மஹா காவியங்களின் தமிழ் மொழி பெயர்ப்பு.

ஆயுர்வேத பூஷண பண்டித்

எம். துரைசாமி ஐயங்கார் அவர்களால்

மொழி பெயர்க்கப்பட்டவை.

## காதம்பரி

சீர்திருத்திய பதிப்பு.

1400 வருஷங்களுக்கு முன் ஸ்ரீ பட்டபாணன் இயற்றிய ஸம்ஸ்கிருத காதம்பரீயின் மொழி பெயர்ப்பு. கதை வெகு அற்புதமானது. பண்டைக்காலத்திய இந்திய நாகரீகத்தை விளக்கும் வர்ணனேகள். வாக்கிய நடை தமிழில் இனிதாகவும் எளிதாகவும் அமையப்பெற்றது. "காதம்பரீயைப் படிக்கையில் இரஸிகர் உணவும் விரும்பார்" என்பது வித்வான்களின் பழமொழி. அநேக படித்த வித்வான்களும் ஸ்திரீகளும் இக்காதம்பரீயைப் புகழ்ந்து வருகிருர்கள்.

விலே. ரூ. 1—8—0

## மேக ஸந்தேசம்.

ஸ்ரீ காளிதாஸ மஹாகவி இயற்றிய ஸம்ஸ்கிருத காவ்யத்தின் அழகிய தமிழ் மொழி பெயர்ப்பு. ஒவ்வொரு பத்தியமும் ஒரு பதம் விடாமல் மொழி பெயர்க்கப் பட்டிருக்கிறது. சாப வசத்தால் மனேவியை விட்டுப் பிரிந்த ஒரு யக்ஷன் தன் மனேவிக்குத் தூது அனுப்பும் விஷயம் வெகு மனேஹரமாய் அமைந்துள்ளது. தமிழ் நடை வெகு இனிது. ஒவ்வொரு பக்கத்தில் அரும்பத உரையும் உபகதைகள் முதலியதைப் பற்றிய அநுபந்தம், முகவுரை முதலியன வெகு உபயோகமாயிருக்கும்.

தற்கால விலே ரூ. 0—14—0

இரண்டு நூல்களும் ஒரே தடவையில் விலே ரூ 2.

தபால் சார்ஜு முதலியது வேறு.

வைத்திய கலாநிதி ஆபீஸ்.

20, கங்காதீச்வரர் கோவில் தெருவு, வேப்பேரி, மதராஸ்.




### ஆங்கிலோ ஐரிஷ் தகராறு.

நிலவருஷாசனம் சம்பந்தமாக மத்தியஸ்தத்திற்குச் சம்மதிப்பதாகத் தாம் ஏற்றுக்கொண்டதற்கு ஒரு காலஎல்லை யிருப்பதாயும் அதற்குள் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இணங்கிவராவிட்டால் இதற்கான தொகையை அனுமத்துக் கணக்கிலிருந்து எடுத்துச் செலவழித்து விடப்போவதாயும் மிஸ்டர் தேவலிரா பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கு இறுதிக் கடிதமனுப்பியிருக்கிறார்.

ஐரிஷ் கவர்ன்மெண்டார் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கு நிலவருஷாசனத்தைக் கொடுக்காததால் குடியானவர்களிடமிருந்து அதை வசூலிப்பதையும் நிறுத்தி வைக்க வேண்டுமென்று ஐரிஷ் குடியானவர்கள் மிஸ்டர் தேவலிராவைக் கேட்டுக்கொண்டிருக்கின்றனர்.

அயர்லாந்தின் வியாபாரம் கைத்தொழில்களை அபிவிர்த்தி செய்யவும் விவசாயக் கைத்தொழில் சாமான்களுக்குப் புதியமார்க்கெட்டுகளைத்தேடவும் புதிய கைத்தொழில்களை ஆரம்பிக்கவும் அவசர நிதியாக 20 லக்ஷம் பவுன் அனுமதிக்குமாறு மிஸ்டர் தேவலிரா ஐரிஷ் பார்லிமெண்டான டெயில் சபையைக் கேட்டார். நிலவருஷாசனத்திற்காக வசூலித்து அனுமத்தாக வைக்கப்படும் தொகை இதற்கு உபயோகிக்கப்படுமென்று கருதப்படுகிறது. காஸ்கிரேவ் கட்சியினர் இதைப் பலமாக எதிர்த்து மிஸ்டர் தேவலிரா கவர்ன்மெண்டின் செய்கைகளைக் கண்டித்தபோதிலும் தொகை டெயில் சபையில் பெரும்பான்மையோரால் அனுமதிக்கப்பட்டுவிட்டது.

நிலவருஷாசனத்தைப் பற்றிப் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுடன் மீண்டும் ராஜிப் பேச்சாரம்பிக்க வேண்டுமென்று செனேட் சபையில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

மிஸ்டர் தேவலிராவின் பொருளாதாரத் திட்டத்திற்கு ஒரு வழியில் வெற்றியேற்பட்டிருக்கிறது. வரிகளிலிருந்து தப்புவதற்காக சாகலேட் தயாரிக்கும் இரு பிரிட்டிஷ் கம்பெனிகள் டப்ளினில் ஆலையேற்படுத்தத் தீர்மானித்து விட்டன.

பிரிட்டிஷ் மந்திரி ஸர் தாமஸ் இன்ஸ்கிப் ஒரு பிரசங்கத்தில் மிஸ்டர் தேவலிரா பிரமாண மெடுத்துக்கொள்ள மறுப்பதன் மூலம் நிலவருஷாசனம் கொடுக்க வேண்டிய பொறுப்பைக் கழித்துவிட முடியாதென்றும் பகுத்தறிவை உபயோகித்து ராஜிக்கு வரவேண்டுமென்றும் மதிப்பைப் பார்க்கக் கூடாதென்றும் கூறினார்.

அல்ஸ்டரையும் ஸ்வாதீன அயர்லாந்து கவர்ன்மெண்டில் சேர்த்து விடுவதே கவர்ன்மெண்டின்கொள்கையென்றுஐரிஷ்



சென்னை கவர்னருக்குச் சென்ற திங்கட்கிழமை சித்தூரில் ஜமீன்தார்களால் ஒரு தோட்டக் கச்சேரி நடத்தப்பட்டது. பி.என்.எ.

தபால் இலாகா மந்திரி மிஸ்டர் கானலி கூறினார்.

ஏகாதிபத்தியத்தில் பங்காளியாயிருந்து சில அனுகூலங்களுடன் பல கஷ்டங்களையும் அனுபவிப்பதைவிடச் சுயேச்சையை மேலாகக் கருதுவதாக மிஸ்டர் தேவலிரா கூறினார்.

ஸர்ஜான் சைமன் ஒரு பிரசங்கத்தில் அயர்லாந்து நிலவருஷாசனத்தை யுத்தக் கடனுடன் ஒப்பிடுவது சரியில்லையென்றும், அயர்லாந்தில்நிலங்களைக் குடியானவர்களுக்கு வாங்கிக்கொடுக்க பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் உத்தரவாதமளித்துக் கடன் வாங்கிக் கொடுத்ததாயும்அதற்காகவட்டியும் முதலில் ஒருபாகமுமே வருஷாவருஷம் அயர்லாந்தால் செலுத்தப்பட்டு வருவதாயும் மத்தியஸ்த மூலமாகவோ ராஜிப்பேச்சு மூலமாகவோதான் இதைத் தீர்க்கவேண்டுமென்றும் கூறினார்.

அயர்லாந்தில் அவசர நிலைமை யேற்பட்டிருப்ப:தாக மிஸ்டர் தேவலிரா ஒட்டாவா மகாநாட்டிற்குச் சென்றிருந்த விவசாய இலாகா மந்திரியையும் காரியதரிசியையும் திருப்பி யழைத்துவிட்டார்.

---

### ஜேர்மனியில் கலவரங்கள்.

ஜெர்மனியில் பொதுத் தேர்தலை யொட்டி ஆரம்பித்த கலவரங்களும் அராஜகச் செயல்களும் இன்னும் ஓயவில்லை. வான் பேபன் கவர்ன்மெண்டு மே 31-ந்தேதி அதிகாரத்திற்கு வந்தது முதல் இதுவரையில் கலவரங்களினால் 130 பேர்கள் கொல்லப்பட்டு 1000 பேர்களுக்கு மேல் பலமான காயங்களை யடைந்திருப்பதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. பிரெஸ்லாவில் சைலிஷ்யன் அபேதவாதக் கட்சித் தலைவர் ஹெக்ஸ்மன் வீட்டுஜன்னல் வழியாக ஒரு வெடிகுண்டு எறியப்பட்டது. அவரும் அவருடைய குடும்பத்தாரும் அங்கு இல்லாததால் உயிர் தப்பினார்கள். பிரன்ஸ்விக் என்றவிடத்தில் வெடிகுண்டு எறியப்பட்டதில் நூற்றுக்கணக்கான தொழிலாளர்களின் வீட்டு ஜன்னல்கள் சேதமாயின. 20 வீடுகள் இடிந்து விட்டன. கீல் என்றவிடத்தில் வெடிகுண்டினால் கடைகளுக்குச் சேதம் விளைவிக்கப்பட்டது. அலென்ஸ்டீன் என்றவிடத்தில் பிரபல பொது உடமை வாதி வீடுமீது மோட்டார்காரிலிருந்து ஒரு வெடிகுண்டு எறியப்பட்டது. ஹைடல்பர்க்கில் யூதர்கள் மீது வெடிகுண்டு எறியப்பட்டது. இப்படிச் செய்பவர்களைப் பிடித்துக் கொடுக்க ஆயிரம் மார்க் வீதம் இனாமளிப்பதாகக் கவர்னர் அறிவித்திருக்கிறார். கலவரம் செய்தால் தூக்குத் தண்டனை விதிக்குமாறும் இவ்வழக்குகளைச் சுருக்கமாக விசாரித்து முடிவுகூற அவசரக் கோர்ட்டுகளை ஏற்படுத்தவும் சட்டம் தயாரிக்கப்பட்டு விட்டது.

---

### தேன் அமேரிக்காவில் யுத்தம்.

தென் அமெரிக்காவில் பொலிவியாவுக்கும் பாராகுவேக்கும் ஏற்பட்ட யுத்தத்தில் பொலிவியாப் படைகள் சாகோ பிரதேசத்தில் சில முக்கிய ஸ்தலங்களைப் பிடித்துக் கொண்டன. இரு தேசங்களும் சண்டை போடாமல் மத்தியஸ்தமாகத் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று பல முக்கிய தேசங்களும் வேண்டிக்கொண்டிருக்கின்றன. பொலிவியா, தனக்கு கடலுடன் சம்பந்தமில்லாததால் மிகவும் கஷ்டமாக விருப்பதாயும் ஆகவே பாராகுவேநதி வரையில் உள்ள பிரதேசம் தன்னைச் சேரவேண்டுமென்றும், இதர தேசங்கள் இதில் தலையிட்டுச்சண்டை போடக் கூடாதென்று கூறுவது தன்னையே கஷ்டப்படுத்துவதாகுமென்றும் கூறுகிறது. அர்ஜெண்டைன், பிரேஸில், சிலி, பெரு முதலிய தென் அமெரிக்க தேசங்கள் சேர்ந்து ஒரு நடுநிலைமை ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கின்றன. பொலிவியா, பாராகுவே இரண்டும் சமாதானமாயிருக்க வேண்டுமென்று இவை கேட்டுக் கொண்டிருக்கின்றன. அதோடு, யுத்தத்தின் மூலம் பிரதேசங்களைக் கைப்பற்றிக் கொண்டால் அதை இவை அங்கீகரிப்பதில்லையென்றும் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கின்றன.

---

### ஸ்ரீமான் படேலின் அமேரிக்க யாத்திரை.

இந்தியா சட்டசபை மாஜித் தலைவரான ஸ்ரீமான் வி. ஜே. படேல் சமீபத்தில் இங்கிலாந்திலிருந்து அமெரிக்காவுக்குப் போகிறார். அமெரிக்காவில் சுமார் 3 மாத காலம் தங்கி விட்டு ஜப்பான் வழியாக 1933-ம் வருஷ ஆரம்பத்தில் இந்தியாவுக்குத் திரும்புவார். இந்தியாவில் உள்ள நிலைமையை அவர் அமெரிக்காவில் எடுத்துக் கூறிப்பிரசாரம் செய்வார். இந்தியாவுக்குச் சுயேச்சை யளிக்கப்பட

விட்டால் அமெரிக்கா யுத்தக் கடனை ரத்து செய்யாதென்று அவர் நம்புகிறார்.

---

### சிலோன் அரசியல் நெருக்கடி.

சிலோன் வரவு செலவுத்திட்டத்தில் வரவைவிடச் செலவு அதிகமாயிருப்பதால் அதைஈடு செய்ய அரிசி இறக்குமதி வரி விதிக்க வேண்டுமென்று கவர்னர் கூறுகிறார். மந்திரி சபை இதற்குச் சம்மதிக்கவில்லை. வேலையிலிருந்து விலகும் உத்தியோகஸ்தர்கள் தங்கள் பென்ஷனை மொத்தத் தொகையாக வாங்கிக் கொள்ள முடியுமாறு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையைக் குறைக்க வேண்டுமென்று மந்திரிகள் கூறுகிறார்கள். இந்த விவாதம் பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டு மந்திரியின் முடிவுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. அவர்கவர்னர் கூறுவதையே ஆதரிப்பாராகில் மந்திரி சபை அப்படியே ராஜினாமாச் செய்து விடுமென்று தெரிகிறது. அப்படி நேரிட்டால், சட்டசபை மந்திரிகளைப் பூரணமாக ஆதரிப்பதால் அது கலைக்கப்பட்டுப் பொதுத் தேர்தல் நடத்த வேண்டியிருக்கும்.

---

### கானடாவில் புதிய கால்வாய்.

கப்பல்கள் போகக்கூடியதாக 25 மைல் நீளமுள்ள வெல்லாண்டு கால்வாய் 6-ந் தேதி கானடா கவர்னர் ஜெனரல் லார்டு பெஸ்பரோவால் திறந்துவைக்கப்பட்டது. ஈரி, அண்டாரியோ ஆகிய இரு பெரிய ஏரிகளையும் இந்தக்கால்வாய்ஒன்று சேர்க்கிறது. கடலில்செல்லும் கப்பல்கள் இனி இதன்மூலம் பெரிய ஏரிகள் உள்ள மத்தியப் பிரதேசத்திற்குச் செல்லமுடியும். இது 19 வருஷ காலமாக வேலை நடந்து வந்தது. ஒட்டாவா மகாநாட்டிற்குச் சென்றிருந்த ஏகாதிபத்திய மந்திரிகளும் பிரதிநிதிகளும் இந்தத் திறப்பு விழாவிற்குச் சென்றிருந்தனர். இந்தக் கால்வாய்க்கு சுமார் 27 கோடிப் பவுன் செலவாயிருக்கிறது. பதினாயிரம் டன் எடையுள்ள விமாயின் என்ற கப்பல் திறப்புவிழா முடிந்தவுடன் கால்வாய் வழியாகச் சென்றது.

---

### மந்திரியைக் கொல்ல முயன்றதாக.

கானடாவில் வெல்லாண்டு கால்வாய்த் திறப்பு விழாவின் போது பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டு மந்திரி மிஸ்டர் தாமஸைக் கொலை செய்யச் சதியாலோசனை செய்ததாக மலோன் என்ற வாலிப ஐரிஷ்காரர் ஒருவரைக் கானடாப் போலீஸார் கைது செய்திருக்கின்றனர். கானடாத் தொழிலாளர் பாதுகாப்புச் சங்கம் வெளியிட்டிருக்கும் ஒரு அறிக்கையில் போலீஸார் வேண்டுமென்று மலோன் ஓட்டிச்சென்ற மோட்டார் காரில் ஒரு கைத்துப்பாக்கியை வைத்துவிட்டுப் பொய்யாகக் குற்றம் சுமத்தியதாகக் கூறியிருக்கிறது. போலீஸார் இதை மறுக்கின்றனர். மலோன் ஜீவனத்திற்கு வகையின்றி இருப்பதாக அவரைக் கானடா தேசத்திலிருந்து வெளியேற்றிவிட நடவடிக்கை யெடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

---

### ஒட்டாவா மகாநாடு.

ஒட்டாவா மகாநாட்டில் பிரிட்டிஷ் பிரதிநிதிகள் மற்ற ஒவ்வொரு குடியேற்ற நாட்டின் பிரதிநிதிகளுடனும் சம்பாஷணை நடத்தி வருகின்றனர். ஆகஸ்ட்டு 20-ந்தேதிக்குள் மகாநாடு முடிந்து விடுமென்று கூறப்படுகிறது. இந்தியப் பிரதிநிதிகள் தங்கள் பழைய அனுபவங்களைக் கொண்டு உலக விலைகளை உயர்த்துவதற்கு நல்ல யோசனைகளைக் கூறினார்களாம். காப்பு வரி



சென்னை கவர்னருக்குத் திருப்பதியில் திருமலை தேவஸ்தானத்தால் படத்தில் காணப்படும் திருப்_தி கோவிலைப்போன்ற வெள்ளி உருவம் பரிசளிக்கப்பட்டது. சுமார் இரண்டடி நீளமுள்ள இது சென்னை உம்மிடி கம்பெனியாரால் செய்யப்பட்டது. பி.வி.எஸ்.

விசாரணை சபையின் சிபார்சின் பேரில் விதிக்கப்படும் காப்பு வரிகளுடன் முரண்படுமாறு எவ்விதச் சலுகையும் காட்டமுடியாதென்று இந்தியப் பிரதிநிதிகள் கூறினார்களாம். இங்கிலாந்தில் இறக்குமதியாகும் ருஷிய சாமான்கள் சம்பந்தமாக இந்தியப் பிரதிநிதிகள் இதர தேசப்பிரதிநிதிகளிலிருந்து மாறுபட்ட அபிப்பிராயத்தைத் தெரிவித்தனராம். லங்காஷயர் பருத்தி ஆலைகள் பிரிட்டிஷ் இரும்பு எஃகுக் கம்பெனிகள் இவற்றின் பிரதிநிதிகளுடன் இந்தியப் பிரதிநிதிகள் கலந்து பேசினார்கள். இந்தியப் பருத்தியில் இந்திய ஆலைகளுக்கு உபயோகமாவது போகப் பாக்கிக்கு இங்கிலாந்தில் மார்க்கெட்டு பெறுவதைப்பற்றி முக்கியமாக விவாதிக்கப்பட்டது. இந்தியத் தேயிலை, சணல் முதலியவற்றிற்குப் பிரதிநிதிகள் சென்றிருக்கிறார்கள். கானடா திட்டமாகப் பல சாமான்களுக்குக் காப்பு வரி மூலம் சலுகையளிக்குமாறு பிரிட்டனைக் கேட்டிருக்கிறது. 4 கோடிப் பவுன் பிரிட்டிஷ் சாமான்களுக்கு கானடா சலுகை காட்டத் தயாராயிருப்பதாகக் கூறப்படுகிறது. இதர தேசங்களின் பிரதிநிதிகள் தங்களுக்குள்ளாகவும் கூடி யோசித்து வருகின்றனர்.

---

### சீனப் பிரதம மந்திரியின் ராஜீனமா.

மஞ்சூரியா சம்பந்தமாகச் சீன கவர்ன்மெண்டு தீவிரமாக நடவடிக்கை யெடுத்துக் கொள்ளாததைக் கண்டு வடபாகத்து ராணுவ அதிகாரிகள் அதிருப்தி யடைந்திருப்பதால் சீனப் பிரதம மந்திரி டாக்டர் வாங்கிங் வெய் ராஜினாமாச் செய்து விட்டார். நீதி மந்திரி டாக்டர் லோவன்கான் கண் உபத்திரவம் காரணமாக ராஜினாமாச் செய்து விட்டார். சீனாவில் இது மிகுந்த கவலையை உண்டுபண்ணி யிருக்கிறது.

---

### கொண்டாட்டத்தில் வெடி குண்டு.

பிரிட்டனி என்ற மாகாணம் 1532-ம் வருஷத்தில் பிரான்ஸுடன் சேர்க்கப் பட்டதை ஒட்டி 7-ந் தேதி ரெனஸில் கொண்டாட்டம் நடக்க விருந்தது. ஆனால் அன்று காலை 5-மணிக்கு ஒரு பெரிய வெடி விபத்தேற்பட்டு டவுன்ஹாலின் ஜன்னல்கள் எல்லாம் நாசமாக்கப்பட்டு விட்டன. ஒற்றுமையின் சின்னமாக வைக்கப்பட்டிருந்த வெண்கலச் சிலை வேண்டுமென்று தூள் தூளாக்கப் பட்டுவிட்டது. எதிரிலிருந்த நாடகக் கொட்டகையும் சேதமாகிவிட்டது. நகர வாசிகள் மிகுந்த ஆத்திரமடைந்தனர். பிரெஞ்சுப் பிரதம மந்திரி மிஸ்டர் ஹெரியட் கொண்டாட்டத்தில் தலைமை வகித்தார். வர்டூனில் அன்றே பிரஞ்சுக் குடியரசுத் தலைவர் வர்டூன் யுத்தத்தில் இறந்த ஒரு லக்ஷம் பிரஞ்சு சோல்ஜர்களுக்கு ஞாபகச் சின்னத்தைத் திறந்து வைத்தார்.

---

### ஸ்வீடன் பிரதம மந்திரியின் ராஜினமா.

காலஞ்சென்ற இவார்குரூகரிடமிருந்து கட்சிநிதிக்கு 50000 குரோனர் பெற்றதற்காக, குரூகர் சம்பந்தமான எதுவும் நேர்மையற்றதென்ற பொது அபிப்பிராயத்தினால் ஸ்வீடன் தேசப்பிரதம மந்திரி எக்மன் ராஜினாமாச் செய்து விட்டார். பணம் குரூகர் எஸ்டேட் நிர்வாகிகளிடம் திருப்பிக்கொடுக்கப்பட்டு விடும். பொக்கிஷ மந்திரி ஹம்ரின் பிரதம மந்திரியாக வருவார்.

---

### இந்திய ஒலிம்பிக் கோஷ்டியின் வெற்றி.

அமெரிக்காவில் லாஸ் எஞ்சலஸ் என்னுமிடத்தில் உலக ஒலிம்பிக் பந்தயங்கள் நடந்து வருகின்றன. அதில் இந்திய ஹாக்கி கோஷ்டி ஜப்பானிய கோஷ்டியுடன் ஆடி 11 கோல் போட்டது. ஜப்பானிய கோஷ்டி ஒரு கோல் திரும்பிப் போட்டது. அமெரிக்காவும் ஜப்பானும் ஆடியதில் ஜப்பான் 9 கோல் போட்டது. அமெரிக்கா 2 கோல்தான் போட்டது.

---

### இந்திய கிரிக்கெட்டு கோஷ்டி.

இங்கிலாந்தில் இந்திய கோஷ்டிக்கும் கிளஸ்டர்ஷயர் கோஷ்டிக்கும் இவ்வாரம் கிரிக்கெட்டு ஆட்டம் நடந்தது. இந்திய கோஷ்டி முதல் ஆட்டத்தில் 236 ரன்களும் இரண்டாவது ஆட்டத்தில் 390 ரன்களும் எடுத்தது. கிளஸ்டர்ஷயர் கோஷ்டி முதல் ஆட்டத்தில் 230 ரன்களும் இரண்டாவது ஆட்டத்தில் 341 ரன்களும் எடுத்தது. இந்திய கோஷ்டி 55 ரன்களால் ஜெயித்தது.

---

### உலகப் பொருளாதார மகாநாடு.

சமீபத்தில் கூட்ட உத்தேசிக்கப்படும் உலகப்பொருளாதார மகாநாட்டிற்குப் பிரதிநிதிகளை அனுப்புமாறு அழைப்புக்கடிதம் அனுப்பப்பட்டிருந்ததை யுனைடெட் ஸ்டேட்ஸ் ஏற்றுக்கொண்டுவிட்டது. யுத்தக்கடன், நஷ்டஈடு, காப்பு வரி முதலிய விஷயங்கள் இதில் விவாதிக்கப்படமாட்டாவென்றும் வெள்ளியின் மதிப்பைப்பற்றி ஆலோசிக்கப்படுமென்றும் அழைப்பில் கூறப்பட்டிருக்கிறது.

---

### கப்பல் மூழ்கியதால் உயிர்ச்சேதம்.

அசானு என்ற ஸ்பெயின் தேசக் கப்பல் கடலில் மூழ்கிவிட்டதால் அதிலிருந்த 22 மாலுமிகள் மூழ்கி யிறந்து விட்டனர். இருவர் மீட்கப் பட்டனர்.

# இந்திய வர்த்தமானம்

### சட்ட மறுப்பு இயக்கம்.

சட்ட மறுப்பு இயக்கத்தை ஒட்டிச் சென்றவாரம் இன்னும் பலர் கைது செய்யப்பட்டுத் தண்டிக்கப்பட்டனர். ஸ்ரீமதி ஜானகி பஜாஜ் தண்டனை முடிந்து விடுதலையடைந்தார். டாக்டர் அன்ஸாரி ஐரோப்பாவுக்குப் புறப்படுமுன் எரவாடா சிறையில் மகாத்மாஜியையும் ஸ்ரீமதி ஸரோஜினிநாயுடுவையும் ஜனப்பிரெல்வியையும் கண்டு பேச அனுமதி கேட்டார். கவர்ன்மெண்டார் அனுமதி கொடுக்க மறுத்து விட்டனர். காராச்சியில் இந்திய மத்தியப் பருத்திக் கமிட்டி மெம்பரான ஸ்ரீமான் ஜி. பி. கோடாக் காராச்சியிலிருந்து வெளியே போகக் கூடாதென்று பிறப்பிக்கப்பட்ட உத்தரவை மீறியதாக 4 மாதம் கடுங்காவலும் 300 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டார்.

காந்தி தின ஊர்வலத்தை ஒட்டிக் கூர்ஜர மாகாணக் காங்கிரஸ் ஸர்வாதிகாரி ஸ்ரீமான் கோபாலதாஸ் ஜிஞபாயும் பல தொண்டர்களும் கைது செய்யப்பட்டனர். பம்பாயில் முந்திய வாரம் கொடி வணக்கத்தை ஒட்டிக் கைது செய்யப்பட்ட 30 பேர்கள் தண்டனை விதிக்கப்பட்டனர். முன்பு பிரீபிரெஸ்ஸிலிருந்த ஸ்ரீமான் கே. ஸ்ரீநிவாஸன் நிபந்தனை விதித்து விடுதலை செய்யப்பட்டார். பிறகு நிபந்தனைகளின்படி நடக்கவில்லையென்று கைது செய்யப்பட்டு 12 மாதம் கடுங்காவலும் 300 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டார். பம்பாயில் ஸ்ரீமதி சாந்தாபென் படேல் கைதியானார். பம்பாய்க் கார்ப்பொரேஷன் மெம்பரான ஸ்ரீமதி மணிபென் காரா ராஜத்துவேஷமாகப் பிரசங்கம் செய்ததாக ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்.

காந்தி தினத்தை ஒட்டி லாகூரில் ஊர்வலம் நடத்தியதாக 6 தொண்டர்கள் கைது செய்யப்பட்டுத் தண்டிக்கப்பட்டனர். நாகபுரியில் அன்று வன ஸத்தியாக்ரகம் நடத்தியதாக 11 பேர்கள் கைதியாயினர்.

காசியில் மறியலை ஒட்டி 8 ஸ்திரீகளும் 13 வது காங்கிரஸ் ஸர்வாதிகாரியும் கைது செய்யப்பட்டனர்.

கவர்ன்மெண்டாரால் கைப்பற்றப்பட்ட நாகபுரி திலகர் வித்தியாலயத்திலிருந்த சாமான்கள் 600 ரூபாய்க்கு ஏலம் போடப்பட்டன. வட மதுரைக் கோர்ட்டில் தேசியக் கொடியைப் பறக்கவிட்டதாக இரு தொண்டர்கள் கைதியாயினர்.



சென்னை ஸர்வகலாசாலையில் இவ்வருஷம் பட்டம் பெற்ற ஸ்திரீகள். இவாகளுக்கு ஸ்திரீப்பட்டதாரிகள் 'யூனியன் நுங்கம்பாக்கத்தில் ஒரு உபசாரம் நடத்தியது. பி பி பி



சென்னை புரோகிரெஸிவ் யூனியன் ஸ்கூலின் தங்க ஜுபிலி (50-வது வருஷ)ப் பூர்த்திக்கொண்டாட்டம் கனம் டாக்டர் வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரியின் தலைமையில் நடந்தது. பி.பி.பி.

பாரிஸ்டர் அபயங்கர் தேகநிலைமையைச் சிறையில் ஆராய டாக்டர் கேருக்குக் கவர்ன்மெண்டார் அனுமதி கொடுத்துவிட்டனர்.

பூனாவில் வெளியாகும் மராட்டா என்ற பத்திரிகையிடம் 1000 ரூபாய் ஜாமீன் கேட்கப்பட்டிருக்கிறது.

கல்கத்தாவில் காலஞ்சென்ற ஸர் சுரேந்திரநாத பானர்ஜீ தினத்தைக் கொண்டாட வங்காள கவர்ன்மெண்டு நிர்வாக சபை மெம்பர் ஸர் பி. ஸி. மித்தர் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. கூட்டம் நடந்துகொண்டிருக்கையில் சில காங்கிரஸ்காரர்கள் மேடை மீது தேசியக்கொடியைப் பறக்கவிட்டனர். உடனே ஸர். பி. ஸி. மித்தர் வேறு தலைவரைத் தேர்ந்தெடுக்குமாறு கூறிவிட்டுப் போய்விட்டார். பிறகு ஸ்ரீமான் ராமாநந்த சாட்டர்ஜி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுக் கூட்டம் அமைதியாக நடந்தது.

பண்டித கிருஷ்ணகாந்த மாளவியா ராஜத் துவேஷமான வியாசத்தைப் பிரசுரித்ததாக ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டதின் பேரில் செய்துகொண்ட அப்பீல் தள்ளப்பட்டு விட்டது.

ஜமியத் உல் உலமா சர்வாதிகாரி மௌலானா ஹுசேன் ஆமதும் 19 தொண்டர்களும் டில்லியில் கைதுசெய்யப்பட்டனர்.

ஸ்ரீமதி கமலாநேரு இப்போது குணமடைந்திருக்கிறார். பண்டித ஜவஹர்லால்நேரு, சிறைச்சாலை அதிகாரிகள் தமது தாயாரையும் சகோதரியையும் அவமதித்ததைக் கண்டித்து எவருடனும் பேசமறுத்து விட்டதாகக் கூறப்படுகிறது. மகாத்மாஜி, ஆச்ரம வாசிகளுக்கு எழுதும் கடிதங்கள் இப்போது தாமதமின்றிச் சாதாரணமாக வருவதாகக் கூறப்படுகிறது. அடக்குமுறையும் சட்டமறுப்பும் சேர்ந்தாப்போல் நிறுத்தப்பட வேண்டுமென்றும் கவர்ன்மெண்டார் மாகாண சுயேச்சையுடன் மத்தியக் கவர்ன்மெண்டிலும் ஜவாப்தாரித்துவத்தையளிக்க வேண்டுமென்றும் ஸ்ரீமான் கேல்கர் வேண்டுகோள் வெளியிட்டிருக்கிறார்.

சென்னை நகரத்தில் காங்கிரஸ் மாளிகையைப் போலீஸார் வசமிருந்து கைப்பற்றச் சென்ற 18 தொண்டர்கள் கைது செய்யப்பட்டுப் பிறகு விடுதலை செய்யப்பட்டனர். பகிஷ்கார வசனங்களை லார்டு வில்லிங்டன் உருவச் சிலையில் எழுத முயன்றதாக இரு தொண்டர்கள் கைது செய்யப்பட்டு விடப்பட்டனர். மதுரையில் 8 தொண்டர்கள் இரு கோஷ்டிகளாகச் சென்று ஓடும் ரயிலை அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுப்பதன் மூலம் நிறுத்திக் கூட்டம் கூட்டிப் பிரசுரங்களை வழங்கியதாகக் கைது செய்யப் பட்டிருக்கின்றனர். சென்னை ஐக்கிய தேசியக்கட்சி அடக்குமுறையைக் கண்டித்தும் காங்கிரஸுடன் கவர்ன்மெண்டார் ராஜி பேசவேண்டுமென்று வற்புறுத்தியும் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறது.

---

### சுடப்பட்ட போலீஸ் அதிகாரியின் மரணம்.

வங்காளத்தில் கோமில்லா என்றவிடத்தில் சைக்கிளில் செல்லுகையில் ஒருவரால் சுடப்பட்ட உதவிப் போலீஸ் சூபரிண்டெண்டு மிஸ்டர் எலிசன் டெக்கா ஆஸ்பத்திரியில் ரணச்சிகிச்சைக்குப் பின் குணமடைந்து வந்தபோதிலும் மீண்டும் புரையோடிச் சீழ் பிடித்து விட்டது. 5-ந்தேதி காலை அவர் இறந்து விட்டார்.

ஸ்டேட்ஸ்மன் ஆசிரியர் சுடப்பட்டார்.

கல்கத்தா ஸ்டேட்ஸ்மன் பத்திரிகை ஆசிரியர் ஸர். எ. வாட்ஸன் 5-ந் தேதி பிற்பகல் அவருடைய ஆபீஸ்முன்மோட்டார்காரில் வந்திறங்கிய போது அதுலகுமார சென் என்ற இஞ்சினீரிங் கலாசாலை மாணவர் அவருக்கருகிலிருந்து மோட்டார் ஜன்னல் வழியாக அவரைக் கைத் துப்பாக்கியால் சுட்டார். குறி தவறிவிட்டது. சமீபத்திலிருந்த போலீஸ் சேவகனும் காவற்காரனும் வாலிபனைப் பிடித்துக் கொண்டனர். அவன் தன் சட்டைப்பையிலிருந்து விஷத்தை உடனே எடுத்துச் சாப்பிட்டு விட்டதால் கால்மணி நேரத்தில் இறந்து விட்டான். குண்டு ஸர் வாட்சனின் தலைமயிரைத் தொட்டுக் கொண்டு சென்றது.

வகுப்புப்பிரச்னை முடிவு.

ஆகஸ்டு 17-ந்தேதி புதன்கிழமை காலை, வகுப்புப்பிரச்னை சம்பந்தமாகக்கவர்ன்மெண்டின் முடிவு இந்தியாவிலும் இங்கிலாந்திலும் ஏககாலத்தில் வெளியிடப்படும்.

மிதவாதிகளின் அறிக்கை.

கனம் சாஸ்திரி, ஸர் ஸாப்ரூ ஸர் ஆலி இமாம், ஸர் கவாஸ்ஜி ஜிஹாங்கிர், ஸர்தார் மேதாப்ஸிங், ஸர் பிரோஸ்ஸேத்னா ஸ்ரீமான்கள்ஜயகர், கேல்கர், சிந்தாமணி, குன்ஸ்ரூ, தேவதார் முதலியவர்களும் இன்னும் பலரும்இந்தியஊழியச்சங்கத்தின் மூலம் ஒருஅறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர். ஸர்வ கட்சி மகாநாடு கூட்டியதில், பிரிட்டிஷ் பிரதிநிதிகளுக்கும் இந்தியப் பிரதிநிதிகளுக்கும் சமத்துவமும், எல்லாரும் சேர்ந்து செய்யும் முடிவையாதாரமாகக் கொண்டு பார்லிமெண்டில் பிரேரணைகளைக் கொண்டு வருவதென்பதும் அடிப்படையாக விருந்தாயும், கவர்ன்மெண்டார் அனுஷ்டிக்கும் புதிய முறையில் இந்த இரண்டுமில்லாததால்இனி அரசியலைத் தயாரிக்கும் வேலையில் ஒத்துழைக்க முடியாதென்றும் அறிக்கையில கூறியிருக்கின்றனர்.

ஸேத் கோவிந்ததாஸின் துறவு.

மத்திய மாகாணத்தில் பிரபல காங்கிரஸ் தலைவரான ஸேத் கோவிந்தாஸ் ஒரு பெரிய கோடீசுவரர். அவர் சிறை செல்லுமுன் குடிகளை வாரம் கொடுக்கவேண்டாமென்று கூறியிருந்தார். அவரில்லாத போதுஅவர்தகப்பனர்குடிகளை நிர்ப்பந்தித்துவாரம்வசூலித்து விட்டதால் ஸேத் கோவிந்ததாஸ் வெளி வந்தபின்தம் சபதப்படி அரண்மனைக்குள்காலடி வைக்க மறுத்துவிட்டார். இவருடைய ராஜீயக்கொள்கையின் காரணமாகக் குடும்பம் கவர்ன்மெண்டின் அதிருப்திக்கு உட்பட நேர்ந்திருப்பதாயும் அன்னியத்துணி பகிஷ்காரத்தில் 10 வருஷங்களாகக் கல்கத்தாக் கடையில் வருஷத்திற்கு அறுபதினாயிரம் ரூபாய் லாபம் போய்விட்டதாயும் அதிகாரிகள் வரிக்காக அரண்மனையிலிருந்து ஜப்தி செய்தது கௌரவக் குறைவையுண்டுபண்ணிவிட்டதாயும் ஆகவே சொத்தைப் பிரித்துக் கொண்டு விடுமாறும் ஸேத் கோவிந்ததாஸிற்கு அவருடைய தகப்பனர் எழுதினர். தகப்பனருடன் பிள்ளை பாகம் செய்துகொள்ளுவது மரியாதைக் குறைவென்றும் ஏழைகளை நிர்ப்பந்திக்கக் கூடாதென்றும் ஸேத்ஜி கருதி தமக்கு அந்தச்சொத்தில் பாத்தியமே இல்லையென்று விடுதலைப் பத்திரம் எழுதி ரிஜிஸ்டர் செய்து கொடுத்துவிட்டார்.



சென்னை கார்ப்பொரேஷன் தலைவர் ஸ்ரீமான் டி. எஸ். ராமஸ்வாமி ஐயர் திருவட்டீச்வரன் பேட்டை தாயார் ஸாஹிப் தெருவில் சென்ற வாரம் ஒரு யூனனி வைத்தியசாலையைத் திறந்து வைத்தார். பி. பீ. ஏ.

சாரதாச்சட்டப்படித் தண்டனை.

தன் இரண்டு மைனர் பெண்களுக்குப் பால்யத்தில் கல்யாணம் நடத்தி வைத்ததற்காக ஆமதாபாத்தில் ஒரு ஸ்திரீக்குச் சாரதாச் சட்டப்படி 100 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது. மாப்பிள்ளைகளின் தகப்பனருக்கும் 100 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது.

பர்மா பொதுத் தேர்தல்.

பர்மா சட்டசபை இம்மாத முடிவில் கலைக்கப்படுமென்றும் அக்டோபர் 24-ந் தேதி பொதுத் தேர்தல் நடக்குமென்றும் நவம்பர் 21-ந்தேதி புதிய சட்டசபை கூடுமென்றும் கவர்ன்மெண்டால் ஒரு கேள்விக்குப் பதில் கூறப்பட்டது.

பயங்கர இயக்கத் தடை மசோதா.

வங்காளத்தில் புரட்சி இயக்கத்தை அடக்குவதற்காக இப்போதுள்ள அவசரச் சட்டங்கள் முடிந்ததும் அமுலுக்குக் கொண்டுவருவதற்காக இரண்டு மசோதாக்களைக் கவர்ன்மெண்டார் சட்டசபையில் கொண்டுவந்திருக்கிறார்கள். ஒரு மசோதா தனிக் கமிட்டிக்கனுப்பப்பட்டுவிட்டது.

ரயில்வே பொது வேலைநிறுத்தம்.

செப்டெம்பர் 1-ந் தேதி பொது வேலைநிறுத்த அறிக்கையை அகிலஇந்திய ரயில்வே ஊழியர் பெடரேஷன் பொதுக் காரியதரிசி அனுப்பிவிடவேண்டுமென்றும் இடையில் முக்கிய ஸ்தலங்கள் ஒவ்வொன்றிலும் தீவிரப் பிரசாரம் நடத்த வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டு வேலைநிறுத்த நிதியைச் சேகரிக்குமாறு யூனியன்களுக்குச் சுற்றுக் கடிதமனுப்பப்பட்டிருக்கிறது. நிலைமையை ஒரு முறை ஆராயவும் பெடரேஷன் பிரதிநிதித்துவமற்றதென்று ஸர் ஹென்ரி கிட்னி கூறுவதைப் பற்றி யோசிக்கவும் ஆகஸ்டுமாதக் கடைசியில் பெடரேஷன் பொதுக்கூட்டம் ஒன்று நடக்கும்.

சைக்கிலுடன் மோதியதற்கு நஷ்ட ஈடு.

பூனவில் டாக்டர் எஸ். விகிட்னே என்பவர் சைக்கிலில் சென்று கொண்டிருக்கையில் ஒரு மோட்டார்கார் அதனுடன் மோதவே வைத்தியர் கீழே விழுந்தார். காலில் மோட்டார் ஏறி இரண்டு இடங்களில் எலும்பு முறிந்து போயிற்று. இதனால் தாம் நிரந்தரமாக அங்கஹீனராகி விட்டதாக டாக்டர் வழக்குத் தொடர்ந்ததில் மோட்டார் சொந்தக்காரர் ஸ்ரீமான் ராம்ஜிரகோஜி வாகோல்1200 ரூபாய் நஷ்டஈடும் 300 ரூபாய் செலவுத் தொகையும் கொடுக்க வேண்டுமென்று சப் கோர்ட்டில் தீர்ப்புக் கூறப்பட்டது.

டாக்டர் பராஞ்சபேக்குப் புதிய பதவி.

பூனா பெர்கூஸன் கலாசாலைத் தலைவராகவும் பம்பாய்க் கல்வி மந்திரியாகவும் இந்தியா மந்திரி சபை மெம்பராகவும் பதவிகளை வகித்தவரானடாக்டர் ஆர். பி. பராஞ்சபே லக்ஷ்மணபுரி ஸர்வகலாசாலையின் உப அத்தியக்ஷகராக ஏகோபித்துத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

காதலிக்காகத் தற்கொலை.

பம்பாயில் ஒரு முஸ்லிம் வாலிபர், தாம் காதலிக்கும் ஒருபெண்ணைத் தம்முடன் அழைத்துச் சென்று வைத்துக்கொள்ள அநுமதிக்குமாறு சீப்பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட்முன் மனுச் செய்து கொண்டார். பெண்ணின் தாயார் பெண்ணை அவருக்குக் கொடுக்க விரும்பவில்லை. மாஜிஸ்திரேட் பெண்ணை நேரில் கேட்டதில் அந்தப்பெண் தான் அந்த வாலிபரை அதிகமாக நேசிப்பதாயும் அவரைத் தவிர வேறு எவரையும் கலியாணம் செய்து கொள்ளப் போவதில்லையென்றும் ஆனால் தாயார் அதற்குச் சம்மதிக்குமாறு செய்ய நம்பிக்கை கொண்டிருப்பதாயும் தாயாருடனேயே வசிப்பதாயும் கூறினள். இதைக் கேட்டு அந்த வாலிபர் விஷமுண்டு தற்கொலைசெய்து கொண்டார்.

டாக்டர் மூஞ்சேயின் ராஜினமா.

டாக்டர் மூஞ்சே ஹிந்து மகாசபைக் காரியக்கமிட்டித் தலைவர் பதவியை ராஜினமாச் செய்து விட்டார். ஸர்வகட்சி மகாநாட்டு ஆலோசனைக் கமிட்டியிலிருந்து அவர் ராஜினமாச் செய்யாததே இதற்குக் காரணமென்று சிலர் கூறினர்கள். இதை மறுத்து ஹிந்து மகாசபைப் பொதுக் காரியதரிசி ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். டாக்டர் அம்பேத்கர் லண்டனுக்குப் புறப்பட்டுச் சென்றவுடன் டாக்டர் மூஞ்சேயும் புறப்பட்டுச் சென்றதாயும், ஆனால் வகுப்புப் பிரச்னை முடிவு கூறப்படப்போகும் இச்சமயத்தில் இந்தியாவில் தகுந்த வேலை செய்ய வேண்டியிருக்கையில் டாக்டர் மூஞ்சே லண்டனிலிருப்பதைச் சிலர் ஆக்ஷேபித்ததால் அவர் ராஜினமாச் செய்து விட்டதாயும் அதில் கூறப்பட்டிருக்கிறது.

வங்காள முஸ்லிம் பத்திரிகை.

கல்கத்தாவில் வெளிவந்த வங்காளி, ஈவினிங் நியூஸ் என்ற பத்திரிகைகளின் கம்பெனியை வங்காளக் கல்வி மந்திரி தலைமையில் ஒரு முஸ்லிம் கோஷ்டியினர் வாங்கி விட்டனர். ஸ்டார் ஆப் இந்தியா என்று ஒரு புதிய பத்திரிகை இவர்களால் இந்தக் காரியாலயத்திலிருந்து வெளியிடப்படும். வங்காளிப் பத்திரிகையின் சொந்தக்காரர் ஸ்ரீமான் ஆர். எஸ். சர்மா மீண்டும் முன்னைப்போல் வியாபாரத்திற்குத் திரும்பலாமென்று கூறப்படுகிறது.




குதிரைப் பந்தயப் பைத்தியம் கொண்டவர்:—நான் இன்னும் ஒரு குதிரை மீது மாத்திரம் பணம் கட்டுகிறேன். அதுவே கடைசி என்று உறுதியாகக் கூறுகிறேன்.

அவர் மனைவி:—நீங்கள் பணம் கட்டும் எந்தக் குதிரையும் அப்படித்தான்.

—

தர்மத்திற்கு உதவுவதற்காக டிக்கட்டு வைத்து ஒரு சிற்றுண்டிக் கச்சேரி நடத்தப்பட்டது. டிக்கட்டு ஒன்று நான்கணு. ஒருவர் யதேஷ்டமாகச் சிற்றுண்டிகளைச் சாப்பிட்டு இன்னும் கொண்டு வருமாறு உத்தரவிட்டுக்கொண்டே தன் பக்கத்திலிருந்தவரிடம், "இம்மாதிரி நல்ல தர்மங்களை அதிகமாக ஆதரிக்க வேண்டும்!" என்று கூறினர்.

—

ஒரு ஆசிரியரின் மனைவி:—நீங்கள் இரண்டு வாரகாலமாக என்னை ஒரு தடவை கூட முத்தமிடவில்லையே?

ஆசிரியர்:—(ஆச்சரியத்துடன்) அப்படியானல் நான் யாரை முத்தமிட்டு வந்தேன்?

—

ஒருவர் ஹோட்டலில் சில தினங்கள் தங்கவிரும்பியதால் அவருக்காக உத்தேசிக்கப்பட்ட அறைக்கு ஹோட்டல் மானேஜர் அவரை அழைத்துச் சென்றூர்.

வந்தவர்:—இது என்ன சிறைபோலிருக்கிறதே?

மானேஜர்:—அவரவருக்குப் பழக்கமானதுதான் ஞாபகத்திற்கு வரும்!"

—

வியாதியாய் படுத்திருக்கும் புருஷன்:—டாக்டர் என்னை வேறு ஊருக்குச் சென்று ஓய்வெடுத்துக் கொள்ளச் சொல்லியிருக்கிறூர்.

மனைவி:—அவரிடம் உங்கள் நாக்கைக் காட்டினீர்களா?

புருஷன்:—இல்லை. உன் நாக்கைப்பற்றிக் கூறினேன்.

—

ஒரு ஸிவில் வழக்கு கோர்ட்டில் விசாரிக்கப்படுகையில் பிரதிவாதி பக்கம் ஆஜரான பால்ய வக்கீல் நீண்ட நேரம் வாதிக்கவே ஜட்ஜி அலுப்படைந்தவர்போல் காணப்பட்டார். உடனே வாதி பக்கத்து வக்கில் பிரதிவாதி வக்கீலுக்கு ஒரு காயிதத்தில் ஏதோ எழுதி அனுப்பினர். ஆனல் அவர் அதை உடனே படிக்கவில்லை. ஜட்ஜி தம் சேவகனை அந்தக் காயிதத்தை வாங்கிவருமாறு அனுப்பினர். பிரதிவாதி வக்கீல் முகம் உடனே மிகவும்கலக்கமடைந்தது. ஜட்ஜி அந்தக் காயிதத்தைப் படித்து விட்டு வாதி வக்கீலை நோக்கி, "இது எனக்கு வந்தது. உங்களுக்கும் ரஸமாக



மிஸ் ஜார்ஜியா கிரேவ்ஸ் பாரிஸ் நகரத்தில் திறந்த வெளியில் தமது பிரபல நர்த்தனங்களில் ஒன்றைக் காட்டுகிறூர். படத்தில் சிலுவை போல் தோன்றுகிறூர். இ. என். பி.

விருக்கும்" என்று கூறி அவரிடம் கொடுத்தார். அவர் காயிதத்தைப் பிரிக்கவே அதில் பின்வருமாறு எழுதி யிருந்தது:--வாதத்தைநிறுத்திவிடு; மூடன் உன் பக்கமா யிருப்பது விளங்க வில்லையா?"

—

ஒரு கனவான் ஒரு மோட்டார் கம்பெனிக்குச் சென்று மாதத்தவணையாகப் பணம் செலுத்துமாறு ;ஒரு மோட்டார்கார் வேண்டுமென்று கூறினர்.

கம்பெனிக்காரர்:—உங்களைப்பற்றி விசாரிக்கவேண்டும். தெரிந்தவர்கள் யாராவதிருந்தால் கூறுங்கள்.

கனவான்:—முன்பு நான் மோட்டார் வாங்கிய கம்பெனியையே நீங்கள் விசாரிக்கலாம். போன மாதம் அவர்கள் மோட்டாரைத் திருப்பி ஓட்டிச் சென்றபோது அதில் சிறிதுகூடப் பழுதில்லை.

—

ஒருவர்ஹோட்டலுக்குச்சென்று சாப்பிட்டுவிட்டுப் பிறகு முதலாளியிடம் சென்று பணம் கொண்டுவர மறந்துவிட்டதாகக் கூறினர்.

ஹோட்டல் காரர்:—சுவரில் உங்கள் பெயரை எழுதி வைக்கிறேன். அடுத்த தடவை வரும்போது கொடுத்து விடுங்கள்.

சாப்பிட்டவர்:—அப்படி எழுதவேண்டாம். இங்கு வருகிறவர்களெல்லாம் அதைப் பார்ப்பார்கள்.

ஹோட்:—இல்லை! அதை எவரும் பார்க்க முடியாமல் அதன்மேல் உங்கள் மேல்வேஷ்டி தொங்கிக்கொண்டிருக்கும்.

—

புதிய மளிகைக் கடைக்காரன் வியாபாரம் சுகமாயில்லாததால்சுற்றுமுற்றும்பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு சிறு பெண் கையில்ஒருஐந்துரூபாய் நோட்டுடன்வந்து கொண்டிருந்ததைக் காணவே; சந்தோஷமேற்பட்டது.

பெண்:—கடைக்காரா! எங்கம்மா உனக்கு 5 ரூபாய் கொடுக்கவேண்டுமா?

கடைக்காரன்:—ஆமாம், இங்கே கொண்டுவா. நீ யார் வீட்டுப் பெண்?

—

வெய்யில் கடுமையாக இருந்த ஒருநாள் ஆசிரியர் வகுப்புக்கு வந்ததும் பையன்களை நோக்கி, "இன்று என்ன பாடம் நடத்தலாம்?" என்று கேட்டார்.

ஒரு பையன்—ஹிமயமலையில் உள்ள பனிக்கட்டிகளைப் பற்றிக் கூறுங்கள் ஸார்!

—

ராமன்—கிருஷ்ணனைக் கொஞ்ச காலமாக நான் பார்க்கவேயில்லையே! நீ பார்த்தாயோ?

சங்கரன்—நானும் பார்க்கவில்லை. ஆனல் அவன் ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன்.

ரா—என்ன ஆராய்ச்சி?

ச—எங்காவது வேலை கிடைக்குமா என்று.

—

வயது சென்ற ஒரு ஸ்திரீ சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் பிளாட்பாரத்திற்குள் சென்று, 'இந்த ரயில் நெல்லூருக்குப் போகிறதா?' என்று சாமான்களைத் தூக்கி வந்த போர்ட்டரைக் கேட்டாள்.

போர்ட்டர்—ஆம் அம்மா.

ஸ்திரீ—நிச்சயமாக நெல்லூருக்குப் போகிறதென்று தெரியுமா?

போர்ட்டர்:—ஸ்டேஷன் மாஸ்டர், இஞ்சின் டிரைவர், கார்டு, மற்றப் பிரயாணிகள் முதலியவர்கள் அப்படித்தான் நினைத்துக்கொண்டிருக்கிறூர்கள். என்னல் அதற்குமேல் உத்தரவாத மளிக்கமுடியாது.

—

எஜமான்:--(வேலைக்காரனைப் பார்த்து) மாடி அலமாரியின் அடி அறையில்......!

வேலைக்காரன்:—புகை யிலை இருக்கிறது. அது அவ்வளவு நன்றாகவில்லை.

—

நமது சிறு கதை.

# கற்பின் சோதனை

(ஸ்ரீமதி அபயாம்பாள் எழுதியது.)

வேங்கனூர் ஜமீன்தார் பங்களாவில் நன்றாய் அலங்கரிக்கப்பட்ட ஓர் அறையில் 18 வயதுடைய ஸர்வாங்க சுந்தரியான ஓர் யுவதி ஓர் அழகிய ஸோபாவில் அமர்ந்திருந்தாள். சந்திரனை மேகம் மறைப்பது போல் அவள் அழகிய முகம் சஞ்சலத்தினால் வாட்ட மடைந்திருந்தது. அந்த ஸமயம் நல்ல உயர்ந்த கெம்பீரமான உருவமுடைய 25 வயதென மதிக்கத் தகுந்த அழகான வாலிபரொருவர் உள்ளேபிரவேசித்தார். சட்டென்று எழுந்து பெண்மணி அவரை மலர்ந்த முகத்துடன் வரவேற்று அருகிலிருந்த ஸோபாவில் அமரும்படி உபசரித்தாள்.

வந்தவர், ''அம்மணீ வந்தனம்! என்னை வரும்படிச்சொல்லி யனுப்பிய காரியமென்ன? தெரிவித்தால் என்னால் முடிந்ததைச் செய்யத் தடையில்லை!'' என்றார்.

இதைக் கேட்ட பெண் யாதொரு பதிலும் பேசவில்லை. அவள் கண்களில் நீர் ததும்பியது. அதைப் பார்த்த வாலிபருக்குச் சரீரம் படபடத்தது. அவர், 'அம்மணீ ஜமீன்தாரிணியான தங்களுக்கு என்ன வருத்தம் ஏற்பட்டது? தயவு செய்து சொல்லுங்கள்!' என்றார். அதற்கு அம்மங்கை, 'என்ன பிரதாப்? என் அந்தஸ்தையும் பதவியையும் சுட்டிக் காட்டி என் மனதைப் புண் செய்வதே தாங்கள் இன்று வந்ததன் நோக்கமோ?

பிரதாப்:—என்ன? நான் ஏதாகிலும் தவறாகப் பேசினேனா? தாங்கள் சொல்வது எனக்கு யாதொன்றும் விளங்க வில்லையே?

மங்கை:— தவறொன்றுமில்லை! தாங்கள் பழைய வழக்கப்படி என்னை என் பெயரிட்டு அழைப்பதே என் விருப்பம்! தாங்கள் சகோதரியைப் பெயரைச் சொல்லியழைக்க யாது தடை?

அதைக் கேட்ட பிரதாபின் முகம் வாட்ட மடைந்தது. அவன், ''அம்மணீ பழய வழக்கப்படி அழைப்பதென்பது இனி இந்த ஜென்மத்திலில்லை. பெரிய சீமாட்டியான தங்களை எனக்கு ஸமமாய் வைத்துப் பேசுவதும் தகுதியல்ல. ஆயினும் தங்கள் வற்புறுத்தலினால் சகோதரி என்னும் முறையில் அழைக்கிறேன். மனோன்மணீ! இனியாகிலும் என்னை அழைத்தகாரியத்தைச்சொல். அது எதுவாயினும் என் உயிரைக் கொடுத்தேனும் செய்து முடிக்கிறேன்!'' என்றார்.

மனோன்மணி:--பிரதாப்! தங்களுக்குத் துரோகம் செய்து என்னை இந்த ஜமீனுக்கு அடிமைப் படுத்திப் பெற்ற ஏராளமான திரவியத்தினால் நான் பிறந்த நிர்ப்பாக்யக் குடும்பமானது விருத்திக்கு வரவில்லை என்பது உங்களுக்குத் தெரிந்த விஷயம் தானே!

பிரதாப்:—அதைப் பற்றி இப்பொழுதென்ன? மேலே உள்ள காரியத்தைச் சொல்.

மனோன்மணி:—என் சகோதரன் மோகனன் இரண்டுநாள் முன் இங்கு வந்து தனக்கு ஏதோ சில அவசரமான செலவுகளிருப்பதால் 5000 ரூபாய் வேண்டுமென்று தெரிவித்தான்.




54 வயதான ஆர்தர் இ. ரம்ப் என்பவர் முதுகெலும்பில் ஏற்பட்ட கோளாறினால் 23 வருஷங்களாகப் படுக்கையிலேயே இருந்த போதிலும் அப்படியே ஒரு மோட்டார் காரில் சென்று தொழில் நடத்திக் குடும்பத்தை சம்ரக்ஷிக்கிறார். பி. பி. ஏ.

பிர:—அப்படியே கொடுத்திருப்பாயென நினைக்கிறேன்.

மனோ:—நன்றாய்ச் சொன்னீர்கள்; அவன்கேட்கும் போதெல்லாம் கொடுக்க என்னிடம் என்னவிருக்கிறது? பிரபு என்னிடம் பிரியமாயிருந்தாலும் ரூபாய் விஷயத்தில் மிகுந்த கண்டிப் புடையவர். ஆகவே இரண்டு நாளிருந்தால் பிரபுவைக் கேட்டு ஏதாவது வாங்கிக் கொடுப்பதாகச் சொன்னேன். பிறகு அவன் வருத்தத்துடன் போய் விட்டான்.

பிர:—நல்லதாயிற்று.

மனோ:--முழுவதும்கேட்டுச் சொல்லுங்கள். அவன் போனவுடன் அவனுடன்கூடவே ஒரு லக்ஷம் ரூபாய் விலைமதிப்புள்ள என் நகைப்பெட்டியும் போய் விட்டது.

பிரதாப்:—ஆஹா! என்ன அநியாயம்? மோகனன் இவ்வளவு கேவலமான புத்தியுடையவனென்று நான் கனவிலும் நினைக்கவில்லையே! இவ்விஷயம் பிரபுவுக்குத் தெரியுமோ?

மனோ:—என்னுடன் பிறந்தவன் கேவலம் திருடன் என்று அவரிடம் தெரிவிப்பதைவிட என் உயிரைத்துறக்கவும் பின் வாங்கமாட்டேன். தற்சமயம் என் மானத்தைக் காத்த தங்களைத் தவிர வேறு ஒருவருமில்லை. இது விஷயம் ஒருவருக்கும் தெரியாமல் நகைகளை மீட்க வேண்டும்!

பிர:—(சற்று யோசித்து) சரி. நீகவலைப்படாதே! கூடிய சிக்கிரம் உன் நகைகளை மீட்டுத் தருகிறேன்.

மனோ:—இன்றைக்கு நாலாவது நாள் சிங்கபுரம் ஜமீன்தாரிணி ஓர் விருந்து நடத்தப் போகிறாள். அதற்கு நான் பிரபுவுடன் செல்லவேண்டும். நகைகளில்லாமல் எப்படிப் போவதெனக் கவலையாயிருக்கிறது.

பிர:—சரி. இருக்கட்டும். அநேகமாய் இன்னும் 2 தினத்திற்குள்ளேயே கண்டு பிடித்துவிடுகிறேன். கவலைப்படாமலிரு. பிரபுஇப்போது எங்கு சென்றிருக்கிறார்?

மனோ:—அடுத்த கிராமத்திற்கு ஏதோ அலுவலாய் போயிருக்கிறார். நாளைக்குத்தான் வருவார்.

பிர:—சரி. நான் போய் விட்டு இரண்டு நாளில் அவசியம் ஜெயத்துடன் வருகிறேன்.

மனோ:—தங்கள் வரவை ஆவலாக எதிர்பார்த்திருப்பேன்! என் மானமும் உயிரும் தங்கள் கையிலிருக்கின்றன. சென்று வாருங்கள்!

பிரதாப் எழுந்தவுடன், ஓர் வேலைக்காரன் உள்ளே வந்து, 'அம்மணீ பிரபுவந்துவிட்டார். ஹாலில் இருக்கிறார்!' என்றான். இதைக்கேட்ட இருவரும் திடுக்கிட்டனர். 'பிரபுவை நான் சென்று பார்க்கட்டுமா?' என்றான் பிரதாபசந்திரன்! 'வேண்டாம்! வேண்டாம்!! இன்னொரு சமயம் ஆகட்டும் சென்று வாருங்கள்!' என்று அவனை அனுப்பிவிட்டுத் தான் மட்டும் பிரபுவைக் காணச் சென்றாள்.

* * * *

சிங்கபுரத்தில் பிரசித்தி பெற்ற தாசி கமலவேணியின் வீட்டில் ஓர் நாளிரவு 11 மணிக்கு ஓர் ஸோபாவில் தாசி கமலவேணியும் ஓர் யவ்வன வாலிபனும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

கமல:—நாளை ஜமீன்தார் வீட்டு விருந்திற்கு என்னைக் கச்சேரிக்காக அழைத்திருக்கிறார்கள். அதற்கு இந்த நகைகளை அணிந்து செல்லப்போகிறேன்.

வாலி:—கமலம்! நான்சொல்வதைக் கேள். கச்சேரி செய்ய நீ போகவேண்டாம். போனாலும் இந்நகைகளை அணிந்து செல்லக்கூடாது!

கமலம்:—ஏன்? இவைகளை நாலுபேர்பார்த்துச் சந்தோஷிக்காமல் பெட்டியில்வைத்துப் பூஜை செய்யவா வாங்கிவந்தீர்கள்?

வாலி:—கமலம்! அப்படிக்கல்ல. விருந்திற்கு வருபவர்கள் இவ்வுயர்ந்த நகைகளைக் காணுவார்களாகில் பற்பல கேள்விகள் கேட்பார்கள். அதனால் என் சகோதரிக்கு ஏதேனும் ஆபத்து உண்டாகும். அதற்காகத்தான் சொன்னேன்.

கமல:—சரி. உங்கள் சகோதரி எதற்காக இவைகளை உங்களிடம் கொடுத்தாள்? உள்ளதைச் சொல்லுங்கள். அவளாகக் கொடுத்தாளா அல்லது நீங்களாக ஏதேனும்...... செய்துவிட்டீர்களா? என்னிடம் சொல்லுங்கள். அதற்குத் தகுந்தபடி இருவரும் யோசிப்போம்.

வாலி:—அதென்ன கமலம்? நீயே இப்படி என்மீது சந்தேகிக்கிறாய். அப்படியெல்லாம் நான் செய்யப்பட்டவனா? உன் தொந்தரவு சகிக்காமல் 5000 ரூபாய் கடனாக என் சகோதரியிடம் கேட்டேன். அவள் கையில் அச்சமயம் ரூபாய் இல்லாததால் இவைகளை விற்று எடுத்துக் கொள்ளும்படிச் சொன்னாள். உனக்கு வேண்டியது நகை தானே என்று அப்படியேகொணர்ந்தேன். மற்றப்படி விபரீதமாக நினைக்காதே'' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதுவாயிற்கதவைப்படபடவென்று தட்டும் சப்தம் கேட்டு எழுந்துபோய் திறந்தான். அங்கு ஓர் மனிதன் நிற்கக் கண்டு, யாரப்பா நீ?' என்றான்.

வந்தவன் 'என்னைத் தெரியவில்லையா உங்களுக்கு? நான் ஜமீன்தார் மாளிகையின் வேலைக்காரனல்லவா?' என்றான். 'எனக்கு நினைவில்லை! எங்கு வந்தாய்? உள்ளே போவோம் வா!' என, அவன், ஐயா! 'எஜமானியவர்கள் ஓர் அவசரக்

(874-ம் பக்கம் பார்க்க.)

# தென்னிந்தியப் பிரமுகர்கள்

## தண்டாளம் கோபால ராவ்

(1832—1886)

தண்டாளம் கோபால ராவ் என்ற பெரியார் தஞ்சாவூர் சமஸ்தானத்தில் உத்தியோகமாயிருந்தவரான பாவா பண்டிதர் என்ற மகாராஷ்டிரப் பிராமணருடைய கடைசிப் புத்திரராகக் கும்பகோணத்திற்கருகிலுள்ள கணபதி அக்கிரகாரம் என்ற கிராமத்திற் பிறந்தவர். அவர் பிறந்த சிறிது காலத்திற்கெல்லாம் அவருடைய குடும்பத்தினர் திருவாதிக்குச் சென்று பின்பு திவான் ரங்கராயரின் அழைப்பிற்கிணங்கித் திருவாங்கூருக்குக் குடியேறிச் சென்றனர். கோபால ராவின் சகோதரர் இருவர் திருவாங்கூர் சமஸ்தானத்தில் உத்தியோகத்தில் அமர்ந்தனர். ஆயினும் சிறிது காலத்திற் கெல்லாம் பாவா பண்டிதர் அங்குத் தேகவியோகமாய் விட்டபடியால், கோபால ராவ் உள்பட அனைவரும் தஞ்சாவூருக்கே மீண்டும் வந்து விட்டனர்.

கோபாலராவ் தம் சகோதரர்களுடன் வீட்டிலேயே மஹாராஷ்டிர பாஷையும் ஸம்ஸ்கிருதமும் கற்று வல்லவரானார். அச்சமயம் தேவாஜிராவ் என்பவர் அவருக்குச் சிறிதளவு இங்கிலீஷும் போதித்து வந்தார். கோபாலராவ் மிகவும் ஊக்கத்துடன் படித்து இங்கிலீஷிலும் விசேஷப் பாண்டித்திய மடைந்தார். தாம் ஒரு கலாசாலையிலும் சேர்ந்து வித்தியாபி விருத்தி செய்துகொள்ளவில்லையென்றும் 15 வயதில் தம் சொந்த முயற்சியாலேயே படித்துக்கொள்ள நேர்ந்ததென்றும் புத்தகங்களே தம்முடைய ஆசிரியர்களென்றும் அவரே தமது அந்திய காலத்தில் கூறியிருக்கிறார்.

பின்பு அவர் தம்முடைய பதினேழாவது வயதில் தஞ்சாவூர் கலெக்டராபீஸில் ஒரு குமாஸ்தாவாக அமர்ந்தார். இரண்டு வருஷ காலம் அவர் இவ்வுத்தியோகத்தில் இருந்த பிறகு, பொறுப்புள்ள பொது வேலை இலாகாக் காரியஸ்தராக மூன்று வருஷ காலம் வேலை பார்த்து லஞ்சம் வாங்காத யோக்கியர் என்று அனைவராலும் பாராட்டப்பட்டார். தஞ்சாவூர் உதவிக் கலெக்டராக அப்போது விளங்கிய வரும் பிற்காலத்தில் ஹைக்கோர்ட் ஜட்ஜ் பதவியடைந்தவருமான ஹாலோவே என்பவர் அவரைப் பற்றி மிக உயர்வாகப் பேசினார்.

கும்பகோணத்தில் ஸ்தாபிக்கப்பட்ட ஸர்க்கார் கலாசாலையில் 1854ல் கோபால் ராவ் முதல் உபாத்தியாயராக வேலை ஏற்றார். மூன்று வருஷத்திற்குப் பிறகு சென்னை சர்வகலாசாலை ஸ்தாபிக்கப்பட்டபோது அவர் மெட்ரிகுலேஷன் பரீக்ஷைக்குப் போய்த் தேறி, 1859ல் பி. ஏ. பரீக்ஷையில் இராஜதானிக்கெல்லாம் முதலில் தேறினார். உபாத்திமைத் தொழிலுக்குச் செலவிட்ட நேரம் போகத் தமது சொற்பமான ஓய்வு நேரத்தில் படித்த இவர் இவ்வாறு சிறக்கத் தேறியது வியக்கத்தக்கதாகும். வைஸ்ராய் சட்ட சபையங்கத்தினராக அப்போது விளங்கிய போர்ப்ஸ் துரையும் ஹாலோவே துரையும் அவரைப் பெரிதும் பாராட்டிக் கடிதங்கள் எழுதினர்.



தண்டாளம் கோபால ராவ்.

பிறகும் வெகு காலம் கோபாலராவ் கும்பகோணம் கலாசாலையிலேயே உபாத்தியாயராக விளங்கிக் கல்வியிலாகாவிலேயே காலங்கழித்தார். அக்கல்லூரிக்கு ஏற்பட்ட புகழுக்கெல்லாம் அவரும் போர்ட்டர் துரையுமே காரணஸ்தர்களாய் விளங்கினர்.

அதன் பின்பு 1870 முதல் 1872 வரையில் கோபால் ராவ் ஸ்கூல் இன்ஸ்பெக்டராகச் சர்க்காரால் நியமிக்கப்பட்டார். இத்தகைய பொறுப்பான பதவிவகித்தமுதல் இந்தியர் இவரே. அவர் தமது மேற்பார்வையிலுள்ள பாடசாலைகளில் போதனா முறைகளிற் சிறந்த சீர்திருத்தங்களைச் செய்து சர்க்கார் அதிகாரிகளுக்குத் திருப்தியை யுண்டாக்கினார். அதனால் அவர் சென்னைச் சர்வகலாசாலையில் ஒரு அங்கத்தினராக நியமிக்கப்பட்டார்.

1872 முதல் 1874 வரையில் அவர் கும்பகோணம் கல்லூரியில் தலைமையாசிரியராக இருந்தார். அப்பதவியைத் திறமையுடன் எப்போதும் வகிக்க முடியும் என்று அவர் நிதரிசனமாகக் காட்டினாராயினும் அவர் காயமாக நியமிக்கப்படவில்லை. அடுத்த வருஷம் அவர் பிரசிடென்சி காலேஜில் சரித்திர ஆசிரியராக அமர்ந்தார். சிறிது காலத்திற்குப் பிறகு அவருக்கு ராய்பகதூர் என்ற பட்டம் கிடைத்தது.

ராய்பகதூர் கோபால ராவ் தமது அந்திய காலத்திலும் அளவுக்கு விஞ்சி உழைத்த தன் பயனாக நோயுற்றார். ஆயினும் அவர் அதைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. பின்னும் இரண்டு வருஷகாலம் அவர் தமது உத்தியோகத்திலிருந்து விட்டுப் பிறகு விலகிக்கொண்டு கும்பகோணஞ் சென்றார். ஆயினும் அவர் நோய் நாளுக்கு நாள் அதிகமாய் விடவே அவர் திரும்பவும் சென்னைக்கு வரும்படி நேரிட்டது. சிறிது காலம் அவர் நோயோடேயே வருந்தி 1886-ம் வருஷம் மே மாதம் 11-ந்தேதியன்று தேகவியோகமானார். அவருடைய மரணத்திற்காக வருந்தாத மாணவர்களும், கல்வித் துறையிலுழைத்த பிரமுகர்களும் இல்லை. சென்னைக் கல்வியிலாகாவின் தலைவரான டாக்டர் டன்கனும் ஆசிரியர் ராய்பகதூர் ரங்கநாதமுதலியாரும் கிறிஸ்தவக்காலேஜ்தலைவரான டாக்டர் மில்லரும் அவரைப் பெரிதும் பாராட்டினார்கள். கோபாலராவைப்போன்ற சிறந்த சற்குணவானான ஆசிரியரைக்காண்பது துர்லபம் என்று அவருடைய மாணவர்களாயிருந்து பிரபலஸ்தர்களாக இப்போது விளங்குபவர்கள் கூறுகின்றனர். தம் தாய் மொழியாகிய மராத்தியிலும் சமஸ்கிருதத்திலும் அவருக்கு இருந்த பாண்டித்தியம் விசேஷமானது. பெண்கல்வி, விதவா புனர்விவாகம், பாலிய விவாகத்தடை முதலிய சீர்திருத்த விஷயங்களில் அவர் அக்காலத்திலேயே ஆர்வங் கொண்டிருந்தார்.

## கற்பின் சோதனை.

(872-ம் பக்கம் தொடர்ச்சி.)

காரியமாக என்னை அனுப்பினார்கள். அவர்கள் உங்களிடம் நகைகளடங்கிய பெட்டி ஒன்று கொடுத்தார்களாம். அதை உடனே வாங்கி வரும்படியும் தங்கள் செலவுக்கு வேண்டிய ரூபாய்களை வந்து பெற்றுக்கொண்டு போகும்படியும் சொன்னார்கள். சந்தேகமாயிருந்தால் நேரே வந்து நகைகளைக் கொடுத்து விட்டு வாருங்கள்! சீக்கிரம் கிளம்புங்கள்'' என்றான். இதைக்கேட்டதும் மோகனனுக்கு மனம் குழம்பிற்று. பதில் என்ன சொல்வதென்று தோன்றாமல், இப்போது அகாலமாயிற்றே. காலையில் தான் போகலாமே என்றான். வேலைக்காரன் 'இப்படி வீதியில் வாங்க!' என அவனை அழைத்து வந்தான். அங்கு ஓர் போலீஸ் இன்ஸ்பெக்டர் நிற்கக்கண்டு அவன் நடு நடுங்கினான்.

அவர் மோகனனைப்பார்த்து, 'ஐயா! கேவலம் ஓர் தாசி எதிரில் உம்மை அவமானப்படுத்த வேண்டாமென்று நினைத்தேன்! நீர் களவாடிய நகைகளை எங்களிடம் ஒப்புவிக்கிறீரா அல்லது குறைந்தது 5 வருடச் சிறைவாஸம் செய்யப் போகிறீரா? ஜமீன்தாரிணியின் பெயர் வெளிவரக்கூடாதென்றுபார்க்கிறேன். இல்லாவிட்டால் இந்நேரம் உம்மை...!' என்று சொல்லி முடிப்பதற்குள் மோகனன், 'போதும் ஐயா! இந்த நாசக்கார தாசியின் வலையிலகப்பட்டு மோசம் போனேன். இனி என் சகோதரியின் முகத்தில் விழிக்க நான் யோக்யதையுடையவனல்ல! இதோ நகைகளைத் தருகிறேன். தாங்களே என் சகோதரியிடம் சேர்த்துவிடுங்கள்!' என்று உள்ளே சென்று, "கமலம்! நகைகளைக் கொடு! இரண்டு நாளில் உனக்குவேறு வாங்கித் தருகிறேன்!'' என்றான். மறைவிலிருந்து இவர்கள் சம்பாஷணைகளைக் கேட்டிருந்த கமலவேணி ஆத்திரத்துடன், 'அட சண்டாளனே! நீ இப்படிப் பட்டவனென்று நான் நினைக்கவில்லை! என் தலையில் கல்லைப்போடப்பார்த்தாயே! இந்தா உன் நகைகள்! இனி இவ்வீட்டு வழி அடிஎடுத்து வைக்காதே! நடந்து விடு!' என்றாள். இவ்வார்த்தையால் மனம்நொந்த மோகனன், அடி 'மோசக்காரீ! உன்னால் நான் செய்த பாபங்களுக்கு அளவில்லை. என் உத்தம அத்தை மகன் புத்திமதிப்படி உலக க்ஷேமத்திற்கு உழைத்தால் நற்கதியாவது கிடைக்கும். இனி உன் முகத்தில் விழிப்பதில்லை, என்றுசொல்லி, நகைகளை வாங்கி இன்ஸ்பெக்டரிடம் கொடுத்து விட்டு வீட்டை விட்டு வெளியேறினான்.

* * * *

மனோன்மணி:— ஆயினும் பிரதாப்! தாங்கள் செய்த இப்பேருதவியை என் ஆயுளுள்ளவரைமறக்க முடியாது! இவ்வளவு சீக்கிரம் என் நகைகளைப் பெறுவேனென்று கனவிலும் நான் கருதவில்லை. தாங்கள் எவ்விதம் கண்டு பிடித்தீர்களென்று சொல்ல முடியுமோ?

பிரதாப்:—மனோன்மணீ! நான் இங்கிருந்து போனது முதல் என் ஆள் ஒருவனும் நானும் மோகனனை எங்கும் தேடிச் சிங்கபுரம்தாசிவீட்டில் நேற்றிரவு கண்டுபிடித்தோம். மோகனனும் தாசியும் வார்த்தையாடிக் கொண்டிருந்ததை வாயிற்புறத்து ஜன்னல் வழியாய்க் கேட்டுக் கொண்டிருந்தோம். அவன் இந்நகைகளைத் தன் சகோதரியே கொடுத்ததாக அவளிடம் சொன்னான். உடனே நாங்கள் கதவைத் திறக்கச்செய்து நயத்திலும் பயத்திலும் வெருட்டினோம். நாங்கள் போலீஸ்காரரைப்போல் உடைகளணிந்து சென்றிருந்தோமாதலால் அவன் பயந்து தாசியிடமிருந்து நகைகளை வாங்கிக்கொடுத்துவிட்டான். அதிலிருந்து அவர்களிருவருக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டு அவ்வீட்டை விட்டுக் கிளம்பி விட்டான். இனி அவன் நல்லவழிக்குத் திரும்பிவிடுவானென்பதில் சந்தேகமில்லை.

மனோ:—அப்படியா? மிகவும் சந்தோஷம்! நான் தங்களுக்கென்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?

பிரதாப்:—உன் ஆபத்துக் காலத்தில் என்னை ஓர் பொருளாய் மதித்து வரவழைத்தனையே! அதுவே எனக்குப் பூர்ண திருப்தியாயிற்று. கடவுள் இனி உனக்கு ஓர் குறையும் வையார். உன் க்ஷேமத்தையே கோரும் ஓர் சகோதரன் உனக்கிருப்பதை மறவாதே. மனோன்மணீ! நான் சென்று வரட்டுமா? என்று சொல்லி எழுந்தார். அப்போது அவர் கண்களில் நீர் ததும்பிற்று. அதைக் கண்ட மனோன்மணியின் மனம் கலங்கிற்று. அவள் அழகிய கண்களிலிருந்தும் முத்துமுத்தாய் நீர்பெருகிவழிந்தது. அதே நிமிஷத்தில்அவர்களுக்கருகிலிருந்த பட்டுப்படுதாவின் மறைவிலிருந்து கையில் துப்பாக்கியுடன் ஜமீன்தார் இவர்களிருவருக்கும் நடுவில் பிரவேசித்தார். பிரபுவைத் திடீரெனக் கண்ட இருவரும் திடுக்கிட்டார்கள்!

பிரதாப்:—பிரபுவே! இதென்ன கோலம்? யாரைத் தண்டிக்க இங்கு மறைந்திருந்தீர்?

பிரபு:—பிரதாபசந்திரா! மனோன்மணீ! நீங்களிருவரும் முதலில் என்னை மன்னியுங்கள்! பிரதாப்! 2நாள்முன் நீ மனோன்மணியுடன் வார்த்தையாடிக் கொண்டிருக்கும்போது தற்செயலாக வந்த என் காதில் நீங்கள் கடைசியாகப் பேசிய வார்த்தைகள்விழுந்தவுடன்சந்தேகம்கொண்டேன். நீமறுபடியும் வருவதாய்ச் சொல்லிப் போனபடியால் மறைந்திருந்து விவரம் தெரிந்துகொண்டு உங்களிருவரையும் தண்டிக்கலாமென இங்கு ஒளிந்திருந்து உங்கள் சம்பாஷணை முழுதும் கேட்டேன். என் தவறை உணர்ந்து உங்கள் மன்னிப்பைப் பெற வந்தேன்!

பிரதாப்:—பிரபுவே! அருந்ததிக்குச் சமமான என் சகோதரி மீது தாங்கள் சந்தேகிக்க நான் காரணமாயிருந்தது பற்றி மிகவும் வருந்துகிறேன்!

மனோன்:—நாதா! தங்கள் மீது தவறில்லை! என் சண்டாள சகோதரனின் தீச்செயலை அப்போதே தங்களிடம் தெரிவித்திருந்தால் இப்பேர்ப்பட்ட விபரீதத்திற்குஇடமிருக்காது. தாங்கள் பிரதாபசந்திரரைப் பற்றித் தவறாக நினைக்கவேண்டாம். நாங்களிருவரும் குழந்தைப் பருவமுதல் ஒன்றாய் வளர்ந்து ஒன்றாய் விளையாடி ஒன்றாய்ப் படித்தவர்கள். அதோடு அவர் என் அன்பான அத்தையின் புத்திரர். சிறந்த வித்யாப் பட்டம் பெற்றவர். எங்கள் குடும்ப நலத்தைக் கருதித் தன் சுயநலத்தைத் துறந்த உத்தமர். தற்சமயம் தேச சேவையிலீடுபட்டிருக்கிறார். என்னை மன்னித்து விடுங்கள் என்று சொல்லி வணங்கினாள். பிரபு தன் மனைவியை அன்போடு அணைத்துச் சமாதானப்படுத்தினார். பிரதாப் இருவரிடமும் விடைபெற்று ஏகினான்.



# சங்கீதமும் நாடகமும்



## நாடகமேடை நினைவுகள்

[காபிரைட்.]

[ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார், பி.எ.பி.எல். எழுதியது.]

பிறகு எல்லா ஏற்பாடுகளையும் முடித்துக்கொண்டு ஒரு புதன்கிழமை இங்கிருந்துபுறப்பட்டோம். யாரோ, வியாழக்கிழமை வாரசூலை, ஆகவே வியாழக்கிழமை புறப்படக்கூடாதென்று சொன்னார்கள். இதிலெல்லாம் எனக்கு நம்பிக்கையில்லாவிட்டாலும், யாராவது இது நல்லதல்லவென்று ஏதாவது சொன்னால் அவர்கள் மனம் கோணுதபடி அவர்களிஷ்டப்படியே நடப்பது என் வழக்கம். சென்னையிலிருந்து தூத்துக்குடி போய்ச்சேர 24-மணிநேரம் பிடித்தது. ரெயில் பிரயாணத்தில் ஒருகஷ்டமுமில்லை; ஆங்காங்கு சிநேகிதர்களுக்கு முன்னதாக எழுதி, உணவு முதலியவற்றையெல்லாம் ஏற்பாடு செய்து வைத்திருந்தோம். தூத்துக்குடியிலிருந்து கப்பல் யாத்திரையில்தான் மிகவும் கஷ்டப்பட்டோம். என்னுடன் வந்த சுமார் 40 பெயர்களில், ஒருவராவது இதற்கு முன் சமுத்திரத்தின் மீது பிரயாணம் செய்ததில்லை. போதாக்குறைக்குத் தூத்துக்குடி ஆர்பரிலிருந்து, எங்களை ஏற்றிக்கொண்டு போக வேண்டிய கப்பலானது ஒரு மைலுக்கு அப்பால் தங்கியிருந்தது; அதைப் போய்ச்சேர ஸ்டீம்லான்ச்சில் போக வேண்டியிருந்தது. இதில் நாங்கள் இத்தனை பெயரும் எங்கள் சாமான்களுடன் ஏறிப் புறப்பட்டவுடன்,: அலைகள் மோத ஆரம்பிக்க, இந்த லான்சானது மேலும் கீழுமாக ஆடத் தலைப்பட்டது. பயங்காளிகளாயிருந்த சில அங்கத்தினரும், எங்களுடன் வந்த சில வேலைக்காரர்களும் அழத் தொடங்கினார்கள்! அவர்களுக்கெல்லாம் தைரியம் சொன்ன போதிலும் எனக்கும் பயமாகத்தானிருந்தது. அப்பொழுது நடந்த ஒரு சிறு சமாசாரத்தை இங்கெழுதுகிறேன். நான் கொஞ்சநேரம் கண்களை மூடிக்கொண்டிருக்க, என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு நண்பர், நான் கண்விழித்தவுடன், 'என் கண்ணை மூடிக்கொண்டிருந்தீர்கள்?' என்று கேட்க, "இத்தனை பேரும் என்னை நம்பி இப்பிரயாணத்திற்கு உடன்பட்டிருக்கிறார்கள். இவர்களையெல்லாம் இப்பிரயாணத்தை முடித்துக் கொண்டு, சுகமாய் அவரவர்கள் வீட்டிற்குக் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கும்படியாக, ஸ்வாமியைக் குறித்துப் பிரார்த்திக்கிறேன்'' என்று உண்மையை உரைத்தேன்.

ஸ்டீம் லான்சிலிருந்து கப்பலைப் போய்ச்சேர்ந்தவுடன், இந்தக் கஷ்டம் ஒழிந்தது என்று எல்லோரும் சந்தோஷித்தார்கள். ஆயினும் இனி வரப்போகிறதை அறிந்தவனாய், எல்லோரையும் ஜாக்கிரதையாயிருக்கும்படி எச்சரித்து விட்டு, என் படுக்கையில் போய்ப்படுத்துக் கொண்டேன். இதைக்கண்டு என்னைப் பயங்காளி என்று ஏளனம் செய்து விட்டு, எல்லோரும் கப்பலின் மேல் பாரிசத்திலிருந்து கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். முதலில் ஒரு கஷ்டமுமில்லாவிட்டாலும், கப்பல் வேகமாய்ப்போக ஆரம்பித்தவுடன், கப்பல் மேலும் கீழுமாய் அலைக்கப்பட, ஏறக்குறைய ஒருவர் தவறாமல் வாந்தியெடுத்து, கீழே அவாவர்களுடைய படுக்கைக்கு வந்தனர். எனக்கு ஞாபகமிருக்கிற வரையில் நான் ஒருவன்தான் வாந்தி எடுக்காதவன். இந்தவாந்திக்கு ஸீ சிக்னெஸ்என்றுபெயர். இதுசாதாரணமாக முதல் முறை கடல் யாத்திரை செய்பவர்களுக்கெல்லாம் காணுவதுண்டு. இதற்கு அநேகம் பெயர் அநேகம் சிகிச்சை சொல்லுகிறார்கள். எனக்குத் தெரிந்தவரையில், கடல் பிரயாணம் சகஜமாகிற வரையில், உணவை மிதமாக்கி, கப்பல் மிகவும் அதிகமாய் அசையும் பொழுது பேசாது படுக்கையில் படுத்துக் கொண்டிருப்பது தான் தக்க சிகிச்சை. ஆயினும் இதை வாசிக்கும் எனது நண்பர்கள், இந்த வாந்திக்காகப் பயப்பட வேண்டியதில்லை. இப்படி வாந்தியெடுத்துவிட்டால், உடலிலிருக்கும் பித்த ஜலமெல்லாம் போய், உடம்பிற்கு ஆரோக்கியத்தையே தருகிறது. நான் மூன்று முறை தூத்துக்குடியிலிருந்து கொழும்பிற்குப் போயிருக்கிறேன். அம்முறைகளிலெல்லாம், அக்கப்பல் தலைவர்களைக் கேட்டதில், அவர்கள் எல்லோரும், ஆசியா கண்டத்தில் கப்பல் யாத்திரை செய்யும் பொழுது, சமுத்திரத்தை இவ்விடத்திற்கடப்பது மிகவும் கடினமானது; முக்கியமாக அரேபியன் சமுத்திரமும், வங்காளக்கடலும் கலக்கிற இடத்தில், கப்பலானது, மிகவும் கலக்கப்படுகிறது என்று சொல்லியிருக்கிறார்கள். போதாக்குறைக்கு இம்முறை, கப்பலின் பங்கில் (படுக்கையறையில்) என்னுடன், படுத்திருந்தவர் ஒரு கோமுட்டிச் செட்டியார். கோமுட்டிகளெல்லாம் பயங்காளிகள் என்று நான் சொல்லவரவில்லை. ஆயினும் "முதலியார் ஜம்பம்.!'' என்று முதலியார்களைப் பற்றிச் சொல்வது போல், பயங்காளி கோமுட்டி என்று ஒரு வழக்கச் சொல் உண்டு. அந்தப் பழமொழிக்கு ஒத்த குணமுடையவர் என்னுடனிருந்த செட்டியார் (அவர் பெயரை இங்கு நான் வெளியிட இஷ்டமில்லை.) அவர் கண்களில் நீர்ததும்ப, 'சம்பந்தம்! நீதான் எப்படியாவது என்னைக் காப்பாற்றி, என்னை என் பெண்சாதி பிள்ளைகளிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கவேண்டும்!'', என்று அழ ஆரம்பித்தார். அவருக்குச் சமாதானம் சொல்வது என் பாடு போதுமென்றாயிற்று. பிறகு "இரவு எவ்வளவு நீடித்திருந்தாலும் பொழுது விடியவேண்டிய காலம் வந்துதான் தீரவேண்டும்!'' என்னும் முதுமொழிக்கிசைய, அதிகாலையில் கொழும்புத் துறைமுகம் போய்ச் சேர்ந்தோம். கப்பல் ஆட்டம் நீங்கி, நிம்மதியடைந்தோம். கொழும்புத் துறைமுகத்தின் நிபந்தனைகளின் பிரகாரம், எங்கள் சாமான்களையெல்லாம் பரிசோதித்து, எங்களையும் வைத்தியர்கள் பரிசோதித்தபிறகுதான் நாங்கள் கப்பலைவிட்டு இழிய வேண்டியதாயிற்று. இதற்குள்ளாக, எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவும், கொழும்பில் பெரிய கனவானாயிருந்த—நான் முன்னே கூறியபடி எங்களைக் கொழும்பிற்கு வரும்படி அழைத்த—சர் ராமநாதன் என்பவரின் மூத்த குமாரரான, ராஜேந்திரா என்பவரும் வந்து சேர்ந்தார்கள். அவரது உதவியினால், எங்கள் சாமான் பரீட்சையும், வைத்தியப் பரீட்சையும் சீக்கிரத்தில் முடிந்தது.

(தொடரும்.)



இங்கிலாந்தில் ராம்போர்டு என்ற விடத்தில் வசந்த காலக் கொண்டாட்டத்தின் போது பூர்வீக ஜாதியினர் நடனமாடும் சாக்ஷி. இ. என். பி.




## ஸங்கீதம்.

[காபிரைட்.]

(ஸ்ரீமான் வி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார், பி. எ. எழுதியது.)

பல்லவி

நி சித்தமு நா பாக்யமய்ய,
நிருபாதிக! நீ வாடனய்ய.

அனுபல்லவி

யோசிஞ்சி கார்யமு லேதனுத்ஸ
நொகபாரி சரணனுகொண்டினய்ய

சரணம்

பரதைவமுல ஜூசிநந் தனே
பாவமந்து நீவை பரகேதவைய்ய.
தரலோன நா ஸரிவாரலல் லோ
தயஜூடவய்ய, த்யாகராஜனுத!

II

| | |
|---|---|
| நீ சித்தமு நா பாக்யமு ஐயா | —உன் திருவுளமே நான் செய்த பாக்யமாகும். |
| நிருபாதிக! நீ வாடனு ஐயா | —ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண, மஹாகாரணமென்ற உபாதிகளுக்குப் (தேஹங்களுக்கு)புறம்பானவரே! நான் உம்மைச்சேர்ந்தவனய்யா. |
| யோசிஞ்சி கார்யமு லேது அனுத்ஸ | —பற்பல யோசனை செய்வது தொல்லே, கார்யமாகாதென்று, |
| ஒகபாரி சரணு அனுகொண்டினி ஐயா | —ஒரே தடவையாக உம்மைச் சரணமடைந்தேன் ஐயா. |
| பரதைவமுல ஜூசினந்தனே | —பரதைவங்களைப் பார்த்தவுடனே |
| பாவமந்து நீவை பரகேதவு ஐயா | —என் மனதில் நீ யென்றே நிறைந்திருக்கிறது. |
| த்யாகராஜநுத! தரலோன நா ஸரவாரலல்லோ | —த்யாகராஜனால் போற்றப்பட்டவரே! இவ்வுலகில் எனக்கு ஸமான மானவர்களுக்கெதிரில் |
| தயஜூடவய்யா. | —என்னிடத்தில் கருணைசெய்யும். |

III

நீ சித்தமு:—பகவானுடைய திருவுள்ளமே பக்தனுடைய பாக்யமாகும். இங்கே பாக்யமென்ற பதத்திற்குத் தைவம், பாகதேயம், ஸ்ரீ, விதி யென்று அமரகோசத்தில் பொருள் சொல்லப்படுகிறது. அது பூர்வஜன்மத்தில் ஒவ்வொருவனும் செய்த கர்மமான ஸஞ்சிதமே. தான் முன் ஜன்மங்களில் செய்த கர்மங்களின் பயனையே பகவான் தனக்கு அருள்வார். கூட்டவும் மாட்டார். குறைக்கவும் மாட்டார். அவருடைய திருவுள்ளத்தில் வேறு ஸங்கல்பம் தோன்றாது. இதற்கு ப்ரமாணம் பகவத்கீதை "ஸர்வ சக்தியுள்ளவரானாலும் ஒருவன் செய்த பாபத்தைத் தானே பகவான் ஏற்றுக்கொள்வதில்லை; புண்யத்தையும் ஏற்றுக்கொள்வதில்லை. அக்ஞானத்தால் ஞானம் மூடப்பட்டிருக்கிறது; அதனால் ஜந்துக்கள் மோஹத்தை அடைகிறார்கள். ஸர்வேச்வரன் ஜீவாத்மாக்களில் ஒன்றைச் செய்யென்று புதிதாக ஏற்படுத்துவதில்லை. அதாவது, அவரவர்களின் பூர்வ கர்மத்திற்குத் தகுந்தபடியே கார்யங்களைச் செய்ய விடுகிறார். அந்தக் கணக்கில் அடங்காத புதிய கர்மங்களைத் தன்னிஷ்டப்படி செய்விப்பதுமில்லை. கர்மங்களும் அவைகளின் பயனுக்கும் தன் னிஷ்டப்படி சேர்க்கையை உண்டுபண்ணுவதுமில்லை. அதாவது, நாம் செய்யும் கர்மங்கள் அவைகளின் பலத்திற்கும் காலதேசத்திற்கும் தகுந்தபடி பயனை ஏற்படுத்திக்கொள்ளும். அதில் பகவான் தலையிடமாட்டார். ஒவ்வொருவனுடைய ஸ்வபாவமே தன் வழிப்படி நடக்கும். இங்கே ஸ்வபாவமென்றால், பூர்வஜன்மங்களில் செய்த கர்மங்களின் வாஸனையாக ஸாரமாக ஏற்படும் சக்தியே யென்று சொல்லலாம்.

அல்லது, "உன் திருவுள்ளத்தில் தோன்றும் ஸங்கல்பமே என் பூர்வ ஜன்மத்தில் செய்த கர்மங்களின் பயனைக் காட்டிலும் வேறல்ல அதாவது, மனோவாக்குக் காயங்களால் உன் திருவுள்ளத்தையே பின்பற்றி நடப்பது இந்த ஜன்மத்திலும் முன் ஜன்மங்களிலும் என் ஸ்வபாவம்.

நிருபாதிக:—உபாதிகளற்றவ னென்று பொருள். அதாவது, பகவானுக்கு ப்ரபஞ்சம் சரீரம். ஆகாசசரீரமு ப்ரஹ்மமு, என்று, ஸ்வாமிகள் ஸீதாவரா வென்ற கீர்த்தனத்தால் சொல்வதே ப்ரமாணம்; ப்ரபஞ்சத்திற்குப் பகவான் உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாகிறாரென்று ஒரு கொள்கை. ஈசாவாஸ்யோபனிஷத் முதலாவது மந்த்ரத்தில், சராசரப்ரபஞ்சம் யாவும் பகவானால் வஸிக்கப்பெற்றதென்று சொல்லப்படுகிறது. ஆனால், ஜீவகோடிகளுக்கு தேஹ ஸம்பந்தத்தாலுண்டாகும் குறைகள் பகவானுக்கு ப்ரபஞ்சஸம்பந்தத்தாலில்லையென்று கீதையில பலவிடங்களில் சொல்லப்படுகிறது. ஆகையால், உபாதிகளற்றவரென்றே சொல்லத்தகும்.

நீவாடனய்யா:—நான் உன் பக்தன், உன் ப்ரபன்னன், உன் திருவடியை அடைந்தவன். உன்னைச் சேர்ந்தவன் "உந்தனோடுற்றோமே யாவோம், உனக்கே நாம் ஆட்செய்வோ" மென்ற நாச்சியார் திருப்பாவையின் ஸூக்தியைக் கவனிக்கத்தகும். ஆகையால், உன் ஸங்கல்பத்தைத் தவிர எனக்கு வேறுண்டோ?

யோசிஞ்சி கார்யமு லேது:—கோபாலகிருஷ்ணபாரதிகள் நந்தனார் சரித்ரத்தில் "பற்பல யோசனைசெய்வதும் தொல்லை, பரகதியடைய உபாயமுமில்லை" யென்கிறார். உலகத்திலுள்ள பல மதங்களை ஆராய்ந்து பார்த்து அவை ஸாரமில்லை யென்று தள்ளி, ராமனையே சரணமடைந்தாரென்று, பல கீர்த்தனங்கள் தெரிவிக்கின்றன. (கட்டுஜேஸினாவு, தைவதமு ஸூகமா, பரமாத்முடு வெலிகே, கொனியாடே முதலியவை).

சரணனுகொண்டி:—"முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே" ச்ருதி (மோக்ஷத்தை விரும்பி உன்னைச் சரணமடைகிறேன்).

பரதைவமுல:—'நின்னுவினா ராமதெந்து' வென்ற கீர்த்தனத்தில், "எங்கே பார்த்தாலும் நீயாகவே தோன்றுகிறா" யென்பதைப் பார்க்க. ராமாயணம், பட்டாபிஷேக ஸர்க்கத்தில், ராம ராம வென்று எங்கும் ராமமயமாக லோகத்தில் விளங்கிற்றென்பதையும்; காதூஷணயுத்தத்திலும் மூலபலயுத்தத்திலும் ஒரு ஸமயத்தில் ராமனுடைய மோஹனாஸ்த்ரத்தால் எங்கும் ராமமய மானபதை ஞாபகப்படுத்திக் கொள்ளவும்.

ஸரிவாரலல்லோ:—தான் ராமனுக்கு அந்தரங்க பக்தன், மற்றவர்களைவிடத் தான் அவரு கிருபைக்கு உரியவனென்பதை எல்லோரும் அறியும்படி ராமன் செய்யவேண்டுமென்பது ஸ்வாமிகளின் ஆழ்ந்த கோரிக்கையென்று பல கீர்த்தனங்கள் ஸரிவாரல்லோ வென்ற பதத்தால் வெளியிடுகின்றன.

# தோல் பதனிடும் தொழில்

(ஒரத்தி ஸ்ரீமான் O. P. தேசிகன் எழுதியது.)

உலகத்தின் பொருளாதார மூலங்களில் மக்களது தினஸரி வாழ்க்கையில் மாத்திரமேயன்றி, கைத்தொழில் உலகிலும் கூட தோலினால் செய்யப்படும் பண்டங்களின் உபயோகம் நாளுக்கு நாள் அதிகரித்த வண்ணமிருந்து வருகிறது. மனித வாழ்க்கையில் அஃதோர் இன்றியமையாத வஸ்துவாக ஆய்விட்டதாகவே கூறலாம்.

மக்களிடையே நாகரீக உணர்ச்சி தோன்றிய நாள் தொடங்கி, எந்தக்காலம் முதலாக அவன் இவைகளை யுபயோகிப்பதற்குக் கற்றுக்கொண்டான் என்று நிலையாகக் கூறுவது எளிதல்லவாயினும், தனது உணவைச் சமைத்துத் தின்பதற்கு வகையறியாமல், உழுது பயிரிட்டுப் பண்டங்களை விளைவிக்காமல் பிராணிகளை வேட்டையாடி அவற்றின் இறைச்சியைப் பச்சையாகவே தின்று சுனை நீரையள்ளிக் குடித்த ஆதி மனிதன், வெய்யில் மழை பனி முதலிய சீதோஷ்ண வேறுபாடுகளிலிருந்து தனது சரீரத்தை மறைத்துப் பாதுகாக்கக் கருதி, தான் வேட்டையாடிய பிராணிகளின் தோலையுரித்து, அதைச் சிறிது சுத்தப் படுத்திக்கால நிலைமைக்கேற்றவாறு அதிலுள்ள உரோமங்களைச் சரீரத்தின் உட்புறமாகவோ அன்றி வெளிப்புறமாகவோ வைத்து ஆடைகளையணியக் கற்றுக்கொண்ட நாளிலேயே தோல்களின் உபயோகத்தையவன் முதன் முதலாக உணர்ந்திருக்கவேண்டும். அதற்குப்பின் நாட்கள் செல்லச் செல்லப் பச்சைத்தோலை அழகாகவும் மிருதுவாகவும், நயமாகவும், நேர்த்தியாகவும் ஒருவாறு பதனிட்டு அணியக் கற்றுக் கொண்டான் ஆதி மனிதன். ஆனால்இவ்வாறு நிகழ்ந்தது மனிதனது நினைவிற்கெட்டாத நெடுங்காலத்திற்கு முந்திய நாட்களிலேயாம்.

ஆனால் இது காலை மனிதனது அறிவு பல்வழிகளிலும் விகாசமடைந்து இயற்கையாகக் கிடைக்கக் கூடிய ஒவ்வொரு வஸ்துவையும் வாழ்க்கையில் எந்த விதத்தில், எந்த அளவிற்குப் பயன்படுத்த முடியும்என்பதைக்குறித்துச் சதாகாலமும் சிந்தித்த வண்ணமிருக்கும் மனிதன், அதற்குரிய ஒவ்வொரு வழியையும், துருவித்துருவியாராய்ந்து தனது அரிய மூளையையும், முயற்சியையும், உழைப்பையும் செலவிட்டுத் தனது தேவைகளையும், ஸௌகர்யங்களையும் திறமையையும் பெருக்கிய வண்ணமிருக்கிறான். அவனது தேவைகள் ஒவ்வொன்றும் அதிகரிப்பதற்கேற்றவாறு நவீன காலத்தில் மனித வாழ்வில் தோலின் உற்பத்திப்பண்டங்கள் யாவும் அவனுக்கு இன்றியமையாத சாதனங்களில்முக்கியம் வாய்ந்தவைகளில் ஒன்றாக இருக்கின்றன.



மழை பெய்யும் மேகங்களை நாசம் செய்யும் வெடி. பவேரியாவில் ஒருவகை வெடிகளைக் கொண்டு மழை வேண்டாதபோது மேகங்கள் கலைக்கப்படுகின்றன. அந்த வாணம் பூமியிலிருந்து சுமார் 1000 கஜ உயரத்திற்குப் போகுமாறு செய்யப்படுகிறது. டபுள்யூ. என். பி. எஸ்.

தற்காலம் தோல்களின் பல வகைப்பட்ட உபயோகங்களில் உயர்தர வகுப்பினர் அணியும் (அலங்காரமான) பாதரக்ஷைகள், மத்திய வகுப்பு ஜனங்கள் சாதாரணமாக உபயோகிக்கும் மிதியடிகள், பூட்ஸ், ஸ்லிப்பர்கள், தபேலா, மிருதங்கம், மேளம் தாசா தப்பட்டை, பேரிகை, முரசுபோன்ற சங்கீதப் போர்க்கருவிகள், குதிரை ஜேணங்கள், கடிவாளங்கள், 'மணிபர்ஸுகள்' (பணப்பைகள்) அழகிய தோற் பெட்டிகள், புத்தகங்களைப் பயிண்டு செய்வதற்குத் துண்டுகள், தோல்ஜாடிகள் நீர் துருத்திகள் (பிஸ்தி) கவலைத் தொண்டான்கள் 'பெல்டிங்' எழுதும் 'பாட்' அட்டைகள், ஸிகரெட்டு கேசுகள், கால் பந்துகள், கிரிக்கெட் பந்துகள், உட்காருவதற்கு ஆஸனங்கள், வார்சாட்டைகள், துருத்திகள், காமரா கேஸுகள், ஸங்கீதப் பெட்டிகள், தோல் வார்கள், கத்தியுறை, கேடயம், பருத்தியந்திரங்களுக்குத் தேவையான 'வாஷர்கள்' அடைப்பங்கள், பாங்குகளில் உபயோகிக்கப்படும் 'கன்வேயர்கள்' செயற்கைக்கால்கள் இவைகளே முக்கியமானவைகளாம். அதைத் தவிர நாம் தினஸரி உபயோகிக்கும் வஸ்துக்கள் பலவற்றில் ஏதேனுமோர் உருவத்தில் அவை சம்பந்தப் பட்டிருப்பதைக் காணலாம். சமீபகாலமாகப் பாம்பு, அணில், முதலை முதலியவற்றின் தோல்களுக்கு அபரிமிதமான கிராக்கியேற்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. மேற்கூறியவற்றினின்றும் பச்சைத் தோல்களைச் சரிவரப் பதனிட்டு அந்தத் தொழிலை முன்னுக்குக் கொண்டு வந்தால் அது இந்நாட்டுத்தேசியச் செல்வங்களில் ஒன்றாக விளங்குவதுடன் இந்தியாவின் பொருளாதார நிலைமையை அபிவிருத்திக்குக்கொண்டு வருவதில் அஃது பெரியதோர் கருவியாகவும் இருக்கக்கூடுமென்பதில் ஐயமில்லை.

இந்தியத் தோல் தொழிலைக் குறித்து எழுதுவதென்றால் அது பெரியதோர் கட்டுரையாக அமையுமாதலின், சென்னை மாகாணத்தில் இத்தொழில் தற்காலமிருந்து வரும் நிலைமையையும், வருங்காலத்தில் அது வளர்ச்சியடைவதற்கு எத்தகைய சாதனங்களும் அறிகுறிகளும் உள்ளனவென்பதையும் ஆராய்வதுடன் நிறுத்திக்கொள்ளுகிறோம்.

1913-ஆம் வருடம் முதலாக, இநதியத்தோல் வியாபாரமும், கைத்தொழில் முயற்சிகளும் துரிதமாக அபிவிருத்தியடைந்து வருகின்றன. நாளுக்கு நாள் அதனுடைய வியாபாரம் வலுவடைந்து நாடெங்கும் வியாபித்து வந்துள்ளது. இங்கிருந்து ஏற்றுமதியாகும் பச்சைத்தோல், பதனிடாத முரட்டுத்தோல் அவற்றின் அளவு இப்பொழுது வெகுவாகக் குறைந்துவிட்டது. அதாவது பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் பதனிட்ட தோல்களின் ஏற்றுமதியில் ஐந்திலோர் பகுதிகூட அவை இல்லை.

கடந்த ஐரோப்பிய யுத்த காலத்தில் நமது நாட்டுத் தோல் தொழிலுக்கு மிகுந்த ஆக்கமும் ஆதரவும் ஏற்பட்-

---

விஜய வஸந்தம் — ஆதி

பல்லவி

நீ சித் த மு நா பாக் ய மய் யா
பா நீ நி ஸா பநிஸநி நீப ப ப பா
நி ரு பா தி கா நீ வா ட னய் யா
ப ம கா க கஸா ஸா ஸா ஸ ஸா ஸநிதநி

அனுபல்லவி

யோ சிஞ் சி கார் ய மு லே த னு த்ஸு
ஸா ஸா நி நீப த நி ஸா ஸ மா மா
ஒ க பா ரி ச ர ண னு கொண் டி னய் யா
க ம கா ரி ஸா ஸா ஸா நீ பா ம மா மா

சரணம்

ப ர தை வ மு ல ஜ ஸி னந் த னே ,,
பா ப பா ப பா மா ம ம கா க காஸா ,,
பா வ மந் து நீ வை ப ர கே தய் யா
பா மா கா ஸ ஸா ஸா ம ம பா ம பா

(இது விச்வம்பரி ஜன்யமெனப்படும். ஆரோஹணம், ஸமபதநிஸ; அவரோஹணம், ஸநிபமகஸ. அனுஷ்டானத்தில் பேதம் காணப்படுகிறது.

ட்டது. அதன் காரணமாக அது வரையிலும் மிகச் சாமானிய நிலைமையிலிருந்த இக்கைத்தொழிலில் நூதனமாகப் பலவித அபிவிருத்திகளும் சீர்திருத்த முறைகளும் கையாளப்படலாயின. இந்நாட்டு ஏற்றுமதிப் பொருள்களின் கணக்கு விவரங்களைக் கவனிக்கையில், தோல் வியாபாரமே அவற்றினுள் முதல் ஸ்தானத்தை வகித்திருப்பது புலப்படும். எருமை, பசு, குதிரை, எருது, ஒட்டகை முதலிய பிராணிகளின் தடித் தோல்களும் கன்றுகள், வெள்ளாடு, மான், செம்மறியாடு முதலிய பிராணிகளின் தோல்களும் அவற்றைப் பதனிடுவதற்கு இன்றியமையாத 'மூலப்பொருள்களும்' நமது மாகாணத்தில் ஏராளமாகக் கிடைப்பதால், இந்த இனத்தில் உலகத்தின் கிராக்கியில் மூன்றிலோர் பாகத்தை நமது தேசம் சமாளித்து வருகிறதென்பதைக் குறித்து யாதொரு ஆச்சரியமும் இருப்பதற்கில்லை.

தற்சமயம் பாதி பதனிட்ட பசுந்தோல்களில் பெரும் பாகம், இந்தியாவிலிருந்தே ஏற்றுமதியாகின்றன. இவ் வியாபாரத்தில் இந்தியா தற்சமயம் ஏகதேச பாத்தியதையைப் பெற்றிருப்பதாகவே கூறிவிடலாம். பெரும்பாலும் அவை பிரிட்டிஷ் துறைமுகங்களுக்கே அனுப்பப்படுகின்றன. நன்கு பதனிட்ட வெள்ளாட்டுத் தோல்களில் முக்கால் பாகத்திற்குமேல் அமெரிக்கர்கள் விலைகொடுத்து வாங்கிக்கொள்ளுகிறார்கள்.

### சென்னையின் விசேஷம்.

சென்னை மாகாணத்திலிருந்து சற்றேறக்குறைய 2200 லக்ஷம் ரூபாய் மதிப்புள்ள சரக்குகள் ஒவ்வொரு வருஷமும் பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இந்த மொத்த ஏற்றுமதியில் ஐந்திலோர் பகுதி பச்சைத்தோல்களும், பதனிட்ட தோல்களுமாகும். சமீபகாலமாக வியாபாரச் சுணக்கத்தினால் இந்த வியாபாரம் மிகுதியும் பாதிக்கப்பட்டு விட்டதாயினும், விரைவிலேயே தோல்மார்க்கெட்டு இந்நிலையினின்றும் சீர்பெறுவதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன. 1919-20ஆம் ஆண்டுகளில் மாத்திரம் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான தோல்களின் மதிப்பு சுமார் $12\frac{1}{2}$ கோடி ரூபாய்களாகும். இந்தப் பெருத்த தொகையில் சுமார் 9 கோடி ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் சென்னை மாகாணத்தினின்றுமே ஏற்றுமதியாயின. ஆனால் அதேவருடத்தில்ஏற்றுமதியான 20 கோடி ரூபாய் மதிப்புள்ளதும் 90000டன்கள் நிறையுள்ளதுமான பதனிடாத பச்சைத் தோல் வகைகளில், சுமார் 2 கோடி ரூபாய் பெறுமானமுள்ளது (4000 டன் நிறையுள்ள) தோல் தினுசுகளே சென்னை மாகாணத்தினின்றும் ஏற்றுமதியானதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

### சென்னையின் தோல் வியாபாரமும், கைத்தொழில் அபிவிருத்தியும்.

சென்னை மாகாணத்தின் ஏற்றுமதி விவரங்களை இந்தியாவின் பிறமாகாணங்களுடைய வியாபாரப் புள்ளிகளுடன் ஒப்பிட்டுக் கணக்கிட்டுப் பார்ப்போமாயின், இந்த ராஜதானியில் தோல் பதனிடுந்தொழில் எவ்வளவு தூரம் முன்னேற்றமடைந்துள்ளதென்பதும், அம்முன்னேற்றம் பலவழிகளிலும் குறிப்பிடத்தக்கதாயிருப்பதும் ஒருவாறு புலப்படும். மேலே கண்ட விவரங்களின் வாயிலாக ஏற்றுமதி செய்யப்பட்ட பதனிட்ட தோல்களின் மதிப்பில் ஐந்தில் ஒரு பாகமே பச்சைத் தோல்களின் மதிப்புள்ளதென்று அறியலாகும். இதனின்றும் நமது மாகாணத்தில் தோல் வியாபாரமும், கைத்தொழிலும் இந்தத் தேசத்தின் முதன்மையான கைத்தொழில்களில் ஒன்றாகக் கருதப்பட வேண்டுமென்றும், அவ்வாறு இக்கைத்தொழில் முன்னணியிலிருப்பதற்கு தோல்வகைகளைப் பதனிடுவதற்கு இன்றியமையாத மூலப்பொருள்களும், பச்சைத் தோல்களும் இவ்விடம் அபரிமிதமாகக் கிடைப்பதும், காரணமாகும் என்று நாம் சொல்லத் தேவையில்லை. மேலும் இத்தேசத்தின் ஏற்றுமதி இறக்குமதிக் கணக்குகளையும் கால்நடைகளின் சங்கியையும் கூர்ந்து நோக்குங்கால், இந்தியா முழுவதிலும் எத்தனை வெள்ளாடுகளும், செம்மறியாடும் இருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றனவோ, அவ்வளவு ஆடுகள் இந்த மாகாணம் ஒன்றிலேயே இருக்கின்றனவென்னும் உண்மையும் புலப்படும். அன்றியும், இவ்வுலகத்திலே இது வரையில் கண்டு பிடிக்கப்பட்ட பொருள்களிலே, தோல்வகைகளைப் பதனிடுவதற்கு மிகவும் உயர்ந்த வஸ்துவாகக் கருதப்படும் ஆவாரம்பட்டையும் இங்கே ஏராளமான அளவில் கிடைப்பதால், தோல் பதனிடும் தொழிலில் சென்னைமாகாணம் முதன்மையாகப் பெற்றிருப்பதன் காரணம் தானாகவே விளங்கும். மேற்கூறிய காரணங்களைத்தவிர, எத்தனையோ தலைமுறைகளாகத்தோல் பதனிடுந்தொழிலிலீடு பட்டிருக்கும் தொழிலாளிகள் இவ் வேலையில் நீடித்த அனுபவமும், திறமையும் பெற்றவர்களாயிருப்பது இத்தொழிலின் மேன்மையான நிலைக்கு ஓரளவு காரணமாகுமென்பதையும் ஒப்புக்கொள்ளவேண்டும். சென்னையைச் சுற்றிலும் பல மைல் கணக்கான விஸ்தீர்ணமுள்ள பிரதேசங்களில் பெரியதும் சிறியதுமான தோல் கிடங்குகளும், பதனிடுமிடங்களும் நூற்றுக் கணக்காக வேலை செய்து வருகின்றன. இத்தொழிலாளர்களை மேற்பார்வையிட்டு அவர்களுக்கு நூதன முறைகளைக் கற்பிப்பதற்குத் திறமை வாய்ந்தவர்களின் உதவியையவர்கள் எதிர்பார்ப்பதில்லை.

### சென்னையின் தோல் தொழில்.

சர்க்காருக்கு வருமானமளிக்கும் இனங்களில் ஓர் முக்கிய ஸ்தானத்தை வகித்திருக்கும் சென்னைத் தோல் தொழிலானது தனக்குச் சிறப்பாகவுள்ள சில குணவிசேஷங்களைப் பெற்றிருக்கிறது. இத்தொழிலை நடத்தி வருவதன் பொருட்டு விலையுயர்ந்த யந்திரங்களேனும், நிர்மாணசாலைகளும் தேவையில்லை. கரியாலும், எண்ணெயாலும், நீராவியாலும், மின்சார விசையாலும் ஓடக்கூடிய யந்திரசகாயங்கள் தற்பொழுதுள்ள நிலைமையில் அவ்வளவு இன்றியமையாதனவாகயிருக்கவில்லை. ஆனால் இத்தொழில் சிறப்புற்று விளங்க வேண்டுமாயின், விவஸாய இலாகா, காட்டு இலாகா ஆகிய இவ்விரு இலாகாக்களின் உதவியும் ஆதரவும் அதற்கின்றியமையாததாகும். சாதாரண காலங்களில் காடுகளில் யதேஷ்டமாகக் கிடைக்கும் கடுக்காய், ஆவாரை போன்ற பொருள்களின் விற்பனையினின்றும் காட்டிலாகாவிற்கு நல்ல வருமானம் கிடைத்து வருகின்றதாயினும் சென்னைத் தோல் வகைகளின் மேன்மையும், சிறப்பும் உலகெங்கும் பாராட்டப் படுவதற்குக் காரணம் ஆவாரம் பட்டைகளை அதைப் பதனிடுவதற்காக உபயோகப்படுத்துவதால் தான். இந்த முக்கியமான மூன்று அமிசங்களாலேயே இக்கைத்தொழில் நமது மாகாணத்தின் பொருளாதார நிலைமையை விருத்தி செய்வதற்கு முற்றிலும் ஏற்றதாயிருப்பது புலப்படும்.

(தொடரும்.)



இதாலியில் மிலான் நகரத்தில் பூராவும் வெள்ளை சலவைக் கற்களால் கட்டப்பட்ட மண்டபம். அவ்வூர் வாசிகள் இதை உலகத்தின் ஆச்சரியங்களில் ஒன்றாகக் கொண்டாடுகின்றனர். பி.பி.ஏ.



அமெரிக்காவில் சிகாகோ என்ற நகரத்தை ஆகாய விமானத்திலிருந்து எடுத்த படம். இ.என்.பி.



பிரான்ஸில் பாரிஸ் நகரத்தில், முன்பு புரட்சியின்போது பாஸ்டைல் என்ற சிறைச்சாலை பிடிபட்ட தினம் ஒவ்வொரு வருஷமும் பெரிய திருநாளாகக் கொண்டாடப்படுகிறது. இவ்வருஷக் கொண்டாட்டத்தின்போது நடந்த வாணவேடிக்கை. டபிள்யூ.என்.பி.எஸ்.



பெர்லின் நகரத்தில் ஹிட்லரின் நாஜிக் கட்சியினர் லாசேன் ஒப்பந்தத்தைக் கண்டித்து நடத்திய ஆர்ப்பாட்டம். பி பி ஏ



70000 பவுனுக்கு இதாலிய கவர்ன்மெண்டுக்கு விற்கப்பட்ட படம். ஜியார்ஜியான் என்பவர் எழுதிய "புயல்" என்ற இப் படம் லண்டனில் காக்ஷியில் வைக்கப்பட்டிருந்தது. இ.என்.பி.



ரங்கூனில் சட்டப்பரீக்ஷையில் தேறிய முதலாவது வங்காளி ஸ்திரீ மிஸ் சூர்னே ஸின்ஹா. ஐ. என். ஏ.



மத்திய மாகாணத்தில் புதிதாக ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஸ்திரீகள் கலாசாலையின் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கும் மிஸஸ் ராமாபாய் தாம்பே. ஆர். வி. எஸ்.



லண்டன் நகரத் தோற்றம். செயிண்ட்பால் கதீட்ரல் என்ற பிரபல மாதாகோவில் ஸ்தூபியிலிருந்து எடுத்தது. டவர் பாலம், எட்லெயிட் ஹவுஸ் முதலிய முக்கிய ஸ்தலங்கள் முன்னால் தெரிகின்றன. இ.என்.பி.

சென்னை ஸர்வ கலாசாலையால் எம். எஸ். ஸி. பட்டம் அளிக்கப் பட்டிருக்கும் கோயமுத்தூர் விவசாயகலாசாலை ரஸாயன ஆசிரியர் ஸ்ரீமான் வி. நரஸிம்மாச்சாரியார். பி.பி.பி.

ஆலவாய் யூனியன் கிறிஸ்தவ கலாசாலை ஆசிரியர் ஸ்ரீமான் கே. ஸி. வரதாச்சாரியாருக்கு சென்னை ஸர்வகலாசாலை பி. எச். டி. என்ற பட்டத்தை அளித்திருக்கிறது. பி. பி. பி.

சென்னை வைத்திய கலாசாலை ஆசிரியர் காப்டன் பி. கே. கோஷி எடின்பரோவில் ராயல் காலேஜ் ஆப் பிசிஷன்ஸ் என்ற வைத்திய கலாசாலை அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். பி. பி. பி.

அலகபாத் ஸர்வகலாசாலை ஆசிரியர் ஸ்ரீமான் பத்ரினாத் பிரஸாதுக்கு அவருடைய கணித சாஸ்திர ஞானத்தைப்பாராட்டி பாரிஸ் ஸர்வகலாசாலை டாக்டர் என்ற கௌரவப் பட்டத்தை யளித்திருக்கிறது. பி. பி. பி.

ஜஸ்டிஸ் ஸி. வி. அனந்த கிருஷ்ண ஐயரின் குமாரன் ஸ்ரீமான் ஸி. ஏ. ராமகிருஷ்ணன் லண்டன் ஸர்வகலாசாலை பி. எஸ். ஸி. பரீக்ஷையில் தேறியிருக்கிறார். பி. பி. பி.

இந்தியாவில் உள்நாட்டு ஆகாயப் போக்குவரத்து டெப்டி டைரக்டராகப் புதிதாக நியமிக்கப்பட்டிருக்கும் காப்டன் ஆலன் ஈடன் டபிள்யூ. எல். பி. எஸ்.

சேலம் அட்வகேட் ஸ்ரீமான் எஸ். ஏ. ஐயாஸாமி சேலம் ஜில்லா முனிசிபாலிட்டிகளால் சன்னை ஸர்வகலாசாலை செனேட் மெம்பராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். பி. என். ஏ.

முப்பதினாயிரம் ரூபாயில் ஒரு சத்திரம்கட்டி முனிசிபாலிட்டி வசம் ஒப்புவிப்பதாக வாக்களித்திருக்கும் மைசூர் அரண்மனை கண்டிராக்டர் ஸ்ரீமான் திம்மாச்சார். ஆர். வி. எஸ்.

சென்ற வாரம் சென்னை ஸர்வ கலாசாலைப் பட்ட மளிப்பு விழா நடந்தபோது யூனிவர்ஸிட்டி டிரெயினிங் கோர் என்ற மாணவர் படையினர் அணிவகுத்து நின்று கவர்னரை வரவேற்றனர். பி.வி.எஸ்.

பள்ளிக்கூட வைத்திய இன்ஸ்பெக்டர்களின் மகாநாடு, சென்ற வாரம் சென்னையில் மந்திரி கனம் பி. முனிஸாமி நாயுடுவால் திறந்து வைக்கப்பட்டது. பி. என். ஏ.

ஹாஸ்யப்பகுதி

# பைத்தியக்கார டாக்டர்

(ஸ்ரீமான் P. R. R. ஐயங்கார் எழுதியது.)

வைத்தியர்களும் வக்கீல்களும் தொங்கும் காலம் இது. சென்னையில் ஏதேனும் ஒரு பிரபல வீதியின் வழியாகச் சென்றால் ஒவ்வொரு வீட்டிலும் ஒரு வக்கீலாவது அல்லது டாக்டராவது தொங்குவதைக் காணலாம்.

வக்கீல்கள் பிழைப்பு அனைவரும் அறிந்ததே. சென்னை ஹைகோர்ட்டுக்குப் போனால் உங்களுக்கு உண்மை தெரியும். வேண்டுமானால் ஒரு நாளைக்கு ஐந்தாறு காகிதங்களைப் பாதியாக மடித்துக் கையில் வைத்துக்கொண்டு போங்கள். கோர்ட்டில் குமாஸ்தாக்களும் வக்கீல்களும், "இங்கே வாங்கோ, சார்; இங்கே வாங்கோ. ஒரு ரூபா பீஸ் கொடுத்தால் போதும்!" என்று ஒவ்வொருவரும், தேவராஜ முதலித் தெருவில் கடைக்காரர்கள் நம் கையைப் பிடித்து இழுப்பதுபோல் இழுப்பார்கள்.

ஆனால் டாக்டர்களோ அவ்வாறு செய்வதில்லை. நடுவீதியில் நின்றுகொண்டு, "உங்களுக்கு மருந்துவேண்டுமா! இங்கே வாங்கோ, நல்ல மருந்து விலை சரசமாகத் தருகிறேன்!" என்று தற்காலம் சொல்லுவதில்லை. இன்னும்பத்துப் பதினைந்து வருஷங்களானால் சொல்லுவார்களோ என்னவோ! என்னால் இப்பொழுது சொல்ல முடியாது.

டாக்டர் நடராஜன் சென்னை மருத்துவக் கல்லூரியினின்றும் வெளியே வந்து எத்தனை வருஷங்களாயினவோ, பகவானுக்குத்தான் தெரியும்! டாக்டர் நடராஜனுக்கே உண்மை தெரியாது. அவர் பள்ளியிலிருந்து வெளியே வந்த வருஷமே வாயிலில் போர்டைப் போட்டுவிட்டார். இரவாயினும் பகலாயினும் தான் மருந்து தருவதற்குத் தயாராக இருப்பதாக அந்தப் பலகையில் எழுதியுமிருந்தார். ஆனால், அவரிடம் யாரும் போகவில்லை. ஒவ்வொருவரும் பெரிய பெரிய டாக்டர்களிடம் அவர்கள் எதிரே நிற்பதற்கு அனுமதி பெறப் பணம் கொடுத்துவிட்டாவது போகிறார்களேயொழிய, சாப்பாட்டிற்குத்தானும் இல்லாமல் திண்டாடிக்கொண்டிருந்த டாக்டர் நடராஜனைப் போன்றவர்களிடம் போவதில்லை.

டாக்டர் நடராஜன் என்ன செய்வார்? பாவம்! தன் மனைவிக்கு ஸ்ரீதனமாகக் கிடைத்த நிலங்களையும் நகைகளையும் ஒவ்வொன்றாக விற்று ஜீவனஞ் செய்து வந்தார். போதாததற்கு அவருடைய மாமனார் அப்போதைக்கப்போது பத்துப் பதினைந்து ரூபாய் கொடுத்து வருவார். ஆனால் அந்த மாமனாரும் மரித்துவிட்டார். மனைவியின் நகைகளெல்லாமும் ஆகிவிட்டன. இனி என்னவேனும் ஜீவனோபாயம் தேடவேண்டியது அத்தியாவசியம். இன்றேல் பட்டினி கிடந்து குடும்பத்தவர் எல்லோரும் மரிக்கவேண்டியதுதான். வாயிலில் போர்டைத் தொங்கவிட்டுவிட்டு அதை நம்பியிருப்பதில் யாதொரு பிரயோஜனமும் இல்லை என்பது டாக்டர் நடராஜனுக்குத் தெரிந்து விட்டது. ஆகையால் எங்கேனும் வேலை காலியாக இருக்குமோ என்று தினசரிப் பத்திரிகைகளை ஊக்கமாகக் கவனித்தார். பல உத்தியோகங்களுக்கு மனுவும் செய்துகொண்டார். கடைசியில் ஒரு பணக்காரப் பைத்தியக்காரனுக்குப் பாதுகாப்பாளனாக உத்தியோகங் கிடைத்தது. மாதமொன்றுக்குச் சம்பளம் இருநூறு ரூபாய் கொடுப்பதாகச் சொன்னார்கள்.

குறித்த தினத்தன்று அவர் பைத்தியக்காரன் வீட்டிற்குச் சென்றார். அவனைப் பார்த்தாலோ பைத்தியக்காரனைப் போல் இல்லை. ஆனால் அந்தப் பைத்தியத்தின் தந்தையோ இருநூறு ரூபாய் சம்பளம் தருவதாகச் சொன்னது மட்டுமல்லாமல் அதனை முன்பணமாகவும் கொடுத்துவிட்டார். போதாததற்கு, பைத்தியத்தை ஊர் ஊராக அழைத்துப் போவதற்குச் செலவுக்காக இருநூறு ரூபாயும் முன்னதாகவே கொடுத்துவிட்டார்.

டாக்டர் அந்த நானூறு ரூபாயில் பாதியைத் தன் மனைவியிடம் கொடுத்துவிட்டு, தான் ஒரு மாதம் வெளியூருக்குப் போய் வருவதாகச் சொல்லி, விடை பெற்றுக்கொண்டு பைத்தியத்தின் வீட்டிற்குச் சென்றார். இருவரும் அன்றிரவு மெயில் வண்டியில் புறப்பட்டுத் திருச்சினாப்பள்ளிக்குப் போவது என்று தீர்மானிக்கப்பட்டது. அதன் பின்னர் டாக்டர் ஒரு மாத காலமாவது பைத்தியத்துடன் தென்னிந்தியா முழுவதும் சுற்றிவர வேண்டும் என்று அவன் தந்தை உத்தரவிட்டார்.



இரண்டு போலீஸ் சேவகர்களும் டாக்டர் நடராஜனைப் பிடித்து இழுத்துச் சென்றனர்.

இரவு மெயில் வண்டியில் பைத்தியமும் டாக்டர் நடராஜனும் கிளம்பினார்கள். இருவரும் இரண்டாவது வகுப்பு வண்டியில் பிரயாணஞ் செய்தனர். அந்த வண்டியில் அவர்கள் இருவர்மட்டுந்தான் இருந்தனர். வேறு எவரும் இருக்கவில்லை. பைத்தியம் எங்கே பித்தமேலீட்டால் வண்டியினின்றும் கீழே குதித்து விடுகிறதோ என்று டாக்டர் அஞ்சி, இரவு ஒரு மணிவரைக்கும் கண் விழித்துக்கொண்டிருந்தார். பைத்தியம் அதற்குள் நன்றாகத் தூங்கினான். ஆகையால், அவன் மறுநாள் காலை வரையில் அவ்வாறே தூங்குவான் என்று டாக்டர் நினைத்தார். தானும் நித்திரை புரியவாரம்பித்தார்.

புகை வண்டி தஞ்சாவூர் ஸ்டேஷனுக்குப் போய்ச்சேர்ந்தது. டாக்டர் கண் விழித்து எழுந்திருந்தார். அவர் எதிரே ஆசனத்தில் தன்னுடைய சட்டை முதலியவைகளை அணிந்துகொண்டு பைத்தியக்காரன் உட்கார்ந்திருந்தான். அவருடைய காதுகுழாயைக்கூட பைத்தியக்காரன் தன் கையில் வைத்துக்கொண்டிருந்தான். யாதொரு சந்தடியும் செய்யாமல் அவன் எவ்வாறு இப்படிச் செய்தான் என்பது டாக்டருக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியது. உடனே அவருக்குத் திகிலும் ஏற்பட்டது. தன்னுடைய சட்டைப்பையில் வைத்திருந்த பணப்பை இருக்கிறதோ என்று தடவிப்பார்த்தார். காணோம்! திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தார்! அவரால் எழுந்திருக்க முடியவில்லை. என்ன நடந்தது என்பது டாக்டருக்குத் தெரியவில்லை. இனி என்ன செய்வது என்பதும் அவருக்கு விளங்கவில்லை. பைத்தியக்காரனுடன் சண்டை போடலாமா, கூடாதா என்று அவர் ஆலோசித்துக்கொண்டிருக்கும்போது, இரண்டு போலீஸ் வீரர்களும் ஒரு டாக்டரும் அந்த வண்டியுள் நுழைந்தனர். அவர்களைக் கண்டதும் பைத்தியக்காரன் நமஸ்காரஞ் செய்து வரவேற்றான். "நான் தான் டாக்டர் நடராஜன்!" என்று சொல்லி, ஒரு அச்சிட்ட காகிதத்தை உள்ளே வந்த டாக்டரிடம் கொடுத்துவிட்டு, "இவன் சுத்தப் பைத்தியமாக இருக்கிறான். நான் என்னாலான மட்டும் சிகிச்சை செய்தேன்! பிரயோஜனம் இல்லை. நாளுக்கு நாள் பித்தம் அதிகமாகி வருகிறது. வருபவர்களையெல்லாம் அடிக்கவாரம்பித்துவிட்டான். ஆகையால் உங்களுடைய பிரபலமான ஆஸ்பத்திரியில் விட்டு வைப்பது என்று தீர்மானித்தேன். அக்காரணத்தால்தான் உமக்குச் சென்னையினின்றும் தந்தியடித்தேன். என் விருப்பப்படி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்ததற்காக உமக்கு ரொம்ப நமஸ்காரம்!" என்றான்.

அதனைக் கேட்டதும் டாக்டர் நடராஜனுக்கு அடக்க முடியாத கோபம் வந்துவிட்டது. "டாக்டர், அவன்தான் பைத்தியக்காரன்! நான்தான் டாக்டர் நடராஜன். என்னுடைய சட்டை, காதில் வைத்துப் பிணியாளிகளைப் பரிசோதிக்கும் கருவி, பணப்பை எல்லாவற்றையும் திருடிக்கொண்டு என்னைப் பைத்தியக்காரனாக்கப் பார்க்கிறான் இவன்!" என்றார்.

ஆனால் உண்மையான பைத்தியக்காரனோ டாக்டரின் வார்த்தைகளைக் கேட்டுக் கோபங்கொள்ளவில்லை. "உன்னையார் பைத்தியம் என்




## நவநாகரீகக் குறிப்புகள்.

(காசினி எழுதியது.)

### ஊர் கோலம்.

* * * உங்கள் ஊரில் : நடந்த ஒரு ஊர் கோலத்தைப் பற்றி நீ வெகுவாகச் சிலாகித்து எழுதி இருக்கிறாய். எங்கள் ஊரில் போன மாதம் நடந்த ஒரு பெரிய மனுஷியாள் வீட்டு ஊர்கோலத்தைப் பார்த்தால் நீ என்ன சொல்லுவாயோ, தெரியவில்லை? படாடோபங்களில் யாதொரு குறைச்சலுமே இல்லை. இரண்டு கலியாணங்களும் நான்கு பூணூல்களும் சேர்ந்து நடந்தன. இரவெல்லாம் ஒரே அமக்களி. எத்தனை 'செட்' பாண்டுகள் தருவித்திருந்தார்களோ! சப்தம் காதைத் துளைத்தது! பழம், வெற்றிலை, பாக்கு, சர்க்கரை, கற்கண்டு முதலியவற்றை வழி நெடுக வழங்கிக் கொண்டே சென்றார்கள். இரண்டு பீப்பாய்களில் சந்தனத்தைக் கரைத்தார்கள் என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். அதைப்பற்றி எனக்கு நிச்சயமாகத் தெரியாது. ஆனால் வழி எல்லாம் சந்தனத்தை வாரி இரைத்துக் கொட்டினார்கள் என்பது என்னமோ வாஸ்தவம்தான். மறுநாள் காலை தார் ரோடெல்லாம் ஒரே சந்தன மயமாகக் காய்ந்து கிடந்தது. வாசனை சுமார் ஒரு பர்லாங்கு வரையில் வீசிற்று. செல்வவந்தர்கள்; பாவம், என்ன செய்



பறவைகள் ஜோடி-சேரும் காலத்தில் ஆண் பறவை பெண் பறவையின் மனதைக் கவருமாறு கடவுள் அதற்குச் சில விசேஷ வசதிகளை யளித்திருக்கிறார். படத்தில் பர்மாவில் ஒருவகை ஆண்கோழி பெண் கோழியைக்கண்டு தன் தோகையை விரிக்கிறது. ஜி. எஸ். ஏ.

வார்கள்? அவர்களால் ஒரு கட்டுப்பிடியில் நிற்க முடியவில்லை.

இதுதான் சிற்சில வேளைகளில் முரண்பாடாக முடிகிறது! எத்தனையோ ஜனங்கள் வறுமைப் பிணியினால் பீடிக்கப்பட்டு, ஒரு வேளையாவது வயிறுநிறையக் கூழ்சாப்பிடுவதற்குக்கூட வழியில்லாமல் தவிக்கும் நிலையில் நம் தேசம் இருக்க, வீண் ஜம்பத்துக்காக இவ்விதம் அனாவசியச் செலவுகள் செய்வது அடுக்குமா? என்பர் சிலர். "நாங்கள், அல்லது எங்கள் முன்னோர்கள் சிரமப்பட்டுச் சம்பாதித்த சொத்து. அதை நாங்கள் அனுபவித்தால் உங்களுக்கென்ன அசூயை, எங்களுக்கு எது அவசியம், எது அனாவசியம் என்பதை உங்களை நிர்ணயித்துச் சொல்லும்படி யாரும் வருந்திக் கேட்கவில்லையே! எங்களுக்குத் தெரியுமே!" என்பர் சிலர். இதில்சரி, தப்பு, எப்படிக் கூறுவது? பொதுவாக; அப்பத்துக்கு மேல் நெய் மிஞ்சினால், அப்பம் தொப்போத்ஸவம் தான் கொண்டாடும். அப்படிக்கின்றி ஜம்பம், டம்பம் இவைகளை விட்டுவிட்டு இருப்பவர்கள் மிகச்சிலரே.

### ரப்பர் வளையல்

சுதேசி ரப்பர் வளையல் இப்பொழுது புதிதாக விலைக்கு வந்திருக்கிறது. இது ஆனைவால் மயிர் வளையல் தினுசில் செய்திருக்கிறது. நடுவில் ஆனைவால் மயிர் பதிப்பிக்கப் பட்டிருக்கும் இடத்திற்கு (சரிகைக் கோடு) அதாவது 'கில்ட்' கொடுத்திருக்கிறது. வளையல் பல வர்ணங்களில் விற்கப் படுகிறது. ரப்பரினால் செய்த வளையலாதலால் உடையாது. அதிகப் பருமனும் இல்லை ஜதை வளையல்களின் விலை இரண்டணாவில் இருந்து மூன்று அணாவரையில் இருக்கிறது. பார்வைக்கு நன்றாகத் தான் இருக்கிறது.

நீ 'எனமல்' பூசின வளையல் ஒரு ஜதை சுமார் விலை என்ன ஆகும் என்று கேட்டிருந்தாய். இது நாம் செய்யச்சொல்லும் கனத்தைப் பொருத்தது. சாதாரணமாகத் தயாரித்து விற்கப்படும் வளையல்களின் விலை ஜதைக்கு முப்பத்தைந்திலிருந்து ஐம்பது ரூபாய் வரையில் இருக்கிறது. ஆனால் இந்த வளையல்களை ஜாக்கிரதையாகவே உபயோகிக்கவேண்டும். எங்காவது சற்று அடிபட்டால் போரும், கண்ணாடி வளையல்கள்போல் இதுவும் உடைந்துவிடும்.

(894-ம் பக்கம் பார்க்க.)

றார்கள்? நீதான் டாக்டர் நடராஜன்!" என்று டாக்டரிடம் சொல்லிவிட்டு, வண்டியுள் வந்த போலீஸ் வீரர்களை நோக்கி, "டாக்டர் நடராஜன் தன் சட்டையை மெத்தையுடன் தைத்துக்கொண்டிருக்கார். ஆகையால் அவரால் எழுந்திருக்க முடியாது. மெள்ள எழுப்பி அழைத்துப் போங்கள்!" என்றான்.

போலீஸ் வீரர்கள் அவ்வாறே செய்தனர். டாக்டர் நடராஜன் இரண்டு பக்கத்திலும் இரண்டு போலீஸ் வீரர்கள் பாது காக்க, அந்த வண்டியினின்றும் கீழே இறங்கினர். பைத்தியக் காரன் வந்திருந்த டாக்டருக்கு 50 ரூபாயும் ஒவ்வொரு சேவகர்களுக்கும் 5 ரூபாயும் கொடுத்து விட்டு, பிணியாளியின் பாது காப்புக்கு வேண்டிய பணத்தை ஊருக்குப் போய் அனுப்புவதாகச் சொன்னான். அவர்கள் எல்லோரும் திருப்தியடைந்தனர். புகை வண்டி புறப்பட்டது.

ஒரு மாதத்திற்குப்பின்னர் பைத்தியக்காரன் தஞ்சாவூருக்குத் திரும்பினான். பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குச் சென்றான். டாக்டர் நடராஜனைக் கண்டான். "டாக்டர், சௌக்கியமா? பைத்தியம் நீங்கி விட்டது போலிருக்கிறதே!" என்று சொல்லி, அவரை வெளியே அழைத்து வந்தான்.

# மகாபாரதம்

## வனபர்வம்.

[பாண்டவர்கள் காமியாக வனத்தில் வசித்து வருகையில் ஸ்ரீ கிருஷ்ணன் அங்கு தோன்றி அவர்களை யோகக்ஷேமம் விசாரித்து விட்டு கௌரவர்களுடன யுத்தம் செய்யப் பாண்டவர்களுக்கு உதவி யளிப்பதாகக் கூறுகிறார். பிறகு மார்க்கண்டேய முனிவர் யுகதருமங்களைப் பற்றிக்கூறுகிறார்.]

### கலியின் தன்மை.

பின்பு, தரும புத்திரர் "முனிவரரே? யுகாதியை நன்கு விளக்கினீர்; கலி யுகத்தில் நடக்கவிருக்கும் செய்திகளைப் பற்றிக் கேட்க விரும்புகிறேன்!" என்று சொல்லவே மார்க்கண்டேயர் மீண்டும் சொல்லத் தொடங்கினர். "கேளும், தரும நந்தனரே! தருமம் என்பது விருஷப வடிவங் கொண்டது; அது கிருத யுகத்திலே துர்க்குணங்கள் இல்லாததாய் நான்கு பாதங்களையும் உடையதாய் இருக்கும்; திரேதா யுகத்தில் ஒரு காலை இழந்து மூன்று காலில் நிற்கும்; துவா பரத்தில் பாதி தருமமும் பாதி அதருமமுமாய் இருக்கும். கலியிலே மூன்று பங்கு அதருமம்; ஒரு பங்குதான் தருமம்; இவ்வாறு மனுஷ்ய சாதிக்கு யுகக்கிரமத்தில் ஆயுஸ், பலம், யனம், புத்தி, தேஜஸ் இவைகள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து போகின்றன. எல்லோரும் கபடர்களாகிறார்கள். தரும வான்கள் போலிருப்பவர்களிடம் அதருமம் குடிகொண்டிருக்கும்.

ஸத்யவான்களைப் போலத் தோன்றுமாறு பொய்பேசித் திரிவார்கள். ஆயுஸ் குறைவதாலும் நோய், மூப்பு இவை அதிகரிப்பதாலும் வித்தைகளைக் கற்பதற்குச் சக்தியில்லாது போகும். அஞ்ஞானமே எங்கும் மிகுந்திருக்கும். காமமும் லோபமும் வைரமும் அதிகரிக்கும்; சாதி சங்கரம் ஏற்படும்; துவிஜர்கள் சூத்திர துல்லியராய் விடுவார்கள்; ஜனங்கள் யுகமுடிவிலே சணல் அணிகளையே உடுப்பார்கள்; வரகு முதலிய புன்செய் தானியங்களையே உண்பார்கள். பசுக்கள் இல்லாமற் போகவே ஆட்டுப்பாலைக் கறந்து குடிப்பார்கள்; மீன் தின்பார்கள்; மந்திரங்களை ஜபியாத நாஸ்திகராயிருப்பார்கள்; பிதாவுக்குப் புத்திரனுடைய சொத்தின்மேலும் புத்திரனுக்குப் பிதாவின் சொத்தின்மேலும் பேராசையுண்டாகி, அவர்களுக்குள் பரஸ்பரம் அன்பு இல்லாமற் போய்விடும்; ஒருவரை ஒருவர் பொருளாசையாற் கொல்வார்கள்; உலகம் முழுவதும் மிலேச்சர்களுடையதாய்விடும்; க்ஷத்திரியர்களும் அரசர்களும் லோக கண்டகர்களாவார்கள். அவர்களுக்கு அகங்காரமும்கொழுப்பும் மிகுந்து இருக்கும்; ரக்ஷிப்பதில்சிரத்தையின்றித் தண்டிப்பதிலே மட்டும் ஆசையுடையவர்களாக இருப்பார்கள். சாதுக்களின் சொத்துக்களையும் மனைவிமக்களையும் அபகரித்து ஜீவிப்பார்கள். அக்காலத்தில் யாரும் கன்னிகையை விவாகஞ்செய்துகொள்ள விரும்பி அவர்களுடைய மாதாபிதாக்களிடமிருந்து தானமாகக் கொள்ளமாட்டார்கள். தாய் தந்தையரும் கன்னிகாதானஞ் செய்யமாட்டார்கள். ஸ்திரீ புருஷர்கள் தாமே ஒருவரையொருவர் வரித்துக் கொள்வார்கள். துவிஜர்கள் நசித்துப் போவார்கள். உலகம்சூத்திரர் மட்டமுள்ளதாய்விடும்; ஸ்திரீகளுக்கும் புருஷர்களுக்கும் ஒற்றுமை இராது; யாரும் குருவினின்றும் வித்தைகளைக் கற்க மாட்டார்கள். உபதேசம் செய்யும் குருக்களும் இருக்கமாட்டார்கள். ஜனங்களுக்கு முழு வயது பதினாறென்றாய்விடும்; ஐந்தாவது அல்லது ஆறாவது வயதில் கன்னிகைகள் பிரஸவிப்பார்கள். புருஷர்கள் ஏழு எட்டு வயதுக்குள் தந்தையர் ஆவார்கள். கிரயஞ்செய்வதில் இருதிறத்தாரும் ஒருவரையொருவர் மோசம் செய்வார்கள்.

யுக முடிவிலே, தோப்புகளையும் மரங்களையும் வெட்டி யழிப்பார்கள். பிராம்மணர்கள் சூத்திரருக்குப் பணி விடை செய்வார்கள். சூத்திரர்கள் பிராம்மணர்களுக்குத் தருமோபதேசம் செய்வார்கள்; காலத்தில்மழை பெய்யாது; வைதிகக் கிரியைகளை ஒழுங்காக ஒருவரும் செய்யமாட்டார்கள்.

பிறகு, திக்குகள் அக்கினி ஜ்வாலைகளால் எரிக்கப்படும். நக்ஷத்திரங்கள் ஒளியிழந்துவிடும், அக்கினி பிண்டங்கள் பூமியிலே விழும்; பயிர்கள் பொசுங்கிப் போம்; எங்கும் தீப்பட்டு எரியும்; வழிப் போக்கர்கள் சோறும் நீரும் பெறாது சிரமத்தால் பாறையிலேயே படுத்துறங்குவார்கள். இவ்வாறு யுகம் முடிந்த பின் தெய்வாநுகூலத்தால் மீண்டும் நல்ல காலம் பிறக்கும். அப்போது சூரியனும் சந்திரனும் பிருகஸ்பதியும் ஏகராசியிலே புஷ்ய நக்ஷத்திரத்தோடு சேர்ந்திருப்பார்கள். அதுவே கிருத யுகாரம்பமாகும். அப்பொழுது காலத்தில் மழை பெய்யும். நக்ஷத்திரங்கள் நல்லொளி வீசும்; எங்கும் சுபிக்ஷமாயும் க்ஷேமமாயும் இருக்கும்.

சம்பளக்கிராமத்திலே நல்ல பிராம்மண வம்சத்திலே விஷ்ணு யசன் என்னும் கல்கி பிறந்து மனதினாலேயே சகல ஆயுதங்களையும் கவசங்களையும் வாகனங்களையும் பெற்றுச் சக்கிரவர்த்தி ஆவார். அவர் இவ்வாறு கலங்கிய உலகத்திற்கு அநுகூலம் செய்வார். சகல மிலேச்சர்களையும் ஒழித்துப்பிராம்மணர்களாலேபோற்றப்பட்டு அசுவமேத யாகஞ் செய்து எல்லாவற்றையும் ஒழுங்கு படுத்துவார். திருடர்களையெல்லாம் கொன்று அதருமத்தை ஒழித்துத் தருமத்தை விருத்தி செய்வார். ஜனங்கள் நற்கிரியை செய்பவர்களாவார்கள்; தோப்புகள், துறவுகள், கோயில்கள் யாகங்கள் இவைகள் அதிகமாகக் காணப்படும்; பிராம்மணர்களும் சாதுக்களும் சுகப்படுவார்கள். எல்லா ருதுக்களிலும் எல்லாப் பயிர்களும் விளையும். ஜனங்கள் தானஞ் செய்வதில் சிரத்தையுடையவர்களாக இருப்பார்கள். ஜபத்திலும் தருமத்திலும் அவர்களுக்குச் சிரத்தை அதிக மிருக்கும்; பிராம்மணர்கள் ஆறு தொழில்களை நன்கு நடத்துவார்கள். மேல் மூன்று வருணத்தினருக்கும் பணிவிடை செய்வதிலே சூத்திரர்கள் சிரத்தையுடையவர்களா யிருப்பார்கள். இவ்வாறு உனக்கு நான்கு யுகங்களின் தருமங்களும் வாயுபுராணத்திலே சொல்லப் பட்டவாறு சொன்னேன். தருமநந்தன! தருமவான் இங்கும் அங்கும் சுகத்தையே யடைவான். பிராம்மணரை அவமதிக்கக்கூடாது. பிராம்மணர் கோபித்தால் உலகங்கள் எல்லாம் அழிந்து போம்" என்று மார்க்கண்டேயர் சொல்லி முடித்தார்.

அதைக்கேட்ட தரும புத்திரர், "முனிவரரே! நான்எதைச் செய்ய வேண்டும்? இவ்வுலகை எவ்வாறு வென்று எவ்வாறு ரக்ஷிக்க வேண்டும்? நான் எவ்வகைத் தருமத்தில் நிற்க வேண்டும்; எவ்வாறு நடந்துகொண்டால் ஸ்வதருமத்தினின்றும் வழுவினவனாக மாட்டேன்" என்று கேட்டார்.

"பிள்ளைகளிடத்திலே போலப் பிரஜைகளிடத்திலும் அன்பு வைத்து எல்லாப் பிராணிகளிடத்திலும் தயை கூர்ந்து அசூயையின்றி நடந்துகொள்ள வேண்டும்; தருமத்தைச் செய்ய வேண்டும்; அதருமத்தைக் கைவிடவேண்டும்; முன்னோர்களின் செயல்களைப் பின்பற்ற வேண்டும்; கருவங் கொள்ளக் கூடாது; எப்பொழுதும் இன்சொல் இயம்ப வேண்டும்; உனக்குத் தெரியாதது இல்லை. ஆதலால் இப்போது நேர்ந்த கஷ்டத்தை நினைத்து வருந்தாதே; என்னுடைய சொற்களை மனத்திலே கொண்டு அதன்படியே நடப்பாயாக" என்று மார்க்கண்டேயர் கூறியதும், தரும நந்தனர், "முனிவரரே! உம்முடைய உபதேசப்படி நடப்பேன் எனக்கு லோபம், பயம், பொறாமை இவை இல்லை" என்று பதிற் சொன்னார். இவ்வாறு தரும நந்தனருக்கும் மார்க்கண்டேயருக்கும் நேர்ந்த சம்பாஷணையைக் கேட்டு அனைவரும் மகிழ்ந்தார்கள்.

### பிராம்மணரின் பெருமை

யுதிஷ்டிரர் மீண்டும் மார்க்கண்டேயரை நோக்கி, 'பிராம்மணர்களின் பெருமையை எனக்கு விளக்கவேண்டும்' என்று பிரார்த்திக்க அம்முனிவர் சொல்லலானார்.

"கேளும், தருமநந்தனரே! அயோத்தியிலே இக்ஷ்வாகு குலத்து மன்னன் பரிக்ஷித்து என்று ஒருவன் இருந்தான். அவன் ஒரு நாள் குதிரை மீதேறி வேட்டையாடச் சென்றான். அங்கு காட்டிலே ஒரு தோட்டத்தின் மத்தியிலே ஒரு குளத்தைக் கண்டு குதிரையினின்று இறங்கி அதைக்கரையிலே கட்டித் தீனி போட்டு விட்டுத் தானும் தண்ணீர் பருகியபின் கரையிலே உட்கார்ந்தான். அப்பொழுது அங்கு இனிய பாட்டொலி கேட்டது. அது வரும் இடத்தை நோக்கிச் சென்று



தஞ்சாவூர் பெரிய கோவிலும் சிவகங்கைக் குளமும். டி. பி. ஜி.

அங்கு ஒரு கன்னிகையைக் கண்டான்; அவளையணுகி, "பெண்ணே! நீயார்? யாருடையவள்?" என்று கேட்டான். "நான் கன்னிகை" என்று அவள் பதிற்சொன்னாள். "ஆயின் என்னை மணந்து கொள்வாயா?" என்றான் அரசன். "என் நிபந்தனைகளை ஒப்புக்கொண்டால் நான் உமது பத்தினியாகிறேன்!" என்றாள். "அது என்ன?" என்று கேட்டபோது, "நான் தண்ணீரைக் காணக்கூடாது!" என்றாள். 'ஆகட்டும்!' என்று அரசன் சம்மதித்தான். அதற்குள் அரசனுடைய குதிரையின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அவனுடைய சைனிகர்கள் அங்கே வந்தார்கள். அந்தப்பெண்ணை ஒரு பல்லக்கில் ஏற்றிக்கொண்டு அரசன் நகரத்துக்குத்திரும்பிவந்தான். மந்திரியானவன் அரசனுக்கும் அவனுடைய மனைவிக்கும் வசிப்பதற்காக ஒரு அழகிய தோட்டத்தை ஏற்படுத்தினான். அங்கு மரங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதையும் கிணறுகளையும் மூடி வைத்திருந்தான். அங்கு தேவியோடு சுகமாகக் காலத்தைக் கழித்த மன்னன் ஒருநாள் தாகத்தால் தண்ணீரைத் தேடிக்கொண்டே மூடப்பட்டிருந்த கிணற்றைக்கண்டான். தேவியை அந்தக் கிணற்றிலே இறங்கும்படி அரசன் சொன்னான். கிணற்றிலே இறங்கினவள் அப்படியே மறைந்துவிட்டாள். அரசன் அவளைத் தேடுவதற்காகக் கிணற்று நீரை வற்ற இறைத்து அங்கு வளையிலேயிருந்த ஒரு தவளையைக் கண்டுகோபத்துடன், "எங்கே என் காதலி?" என்று கேட்டான். அது பதிற் சொல்லாமலிருக்கவே ராஜ்யத்திலுள்ள தவளைகளையெல்லாம் கொன்றுவிடும்படி அரசன் ஆக்ஞாபித்தான். தவளைகள் எல்லாம் பயந்து தவளை ராஜனிடம் சென்றுமுறையிட்டன. தவளையரசன் தவவேடம் பூண்டு அரசனை அணுகி, "மன்னவ! கோபியாதேயும்! அருள்புரிவீராக! குற்றமற்ற தவளைகளைக் கொல்வது தகாது!" என்றான். அதற்கு அரசன், "இந்தத் தவளைகளே என் காதலியைத் தின்றிருக்க வேண்டும்; அவைகளை விட்டேனா?" என்றான். அதைக் கேட்டதும் தவளை ராஜன், "மன்னவ! நான் தவளை ராஜன்! என் பெயர் ஆயு என்பது! உன் காதலி என் பெண்ணான சுசோபனை! அவள் உன்னை மோசம் செய்து மறைந்துவிட்டாள்! இவ்வாறு பல மன்னர்களை அவள் மோசம் செய்திருக்கிறாள்!" என்றான். "எப்படியும் அவளை நீ எனக்குத் தரவேண்டும்!" என்று பரீக்ஷித்து ராஜன் வேண்டவே, தவளை ராஜன், தன் பெண்ணை அழைத்து அவளை அரசனுக்குப் பணியாளாக இருக்கும்படி நியமித்தான். 'உன்னால் பலர் ஏமாற்றப்பட்டதன் பயனாக உனக்குப் பிராம்மணத் துவேஷிகளான பிள்ளைகள் பிறக்கும்!' என்று சொல்லி மறைந்தான்.

மன்னனும் சுசோபனையும் சிறிது காலம் சுகமாக வாழ்ந்தார்கள். அவர்களுக்கு மூன்று பிள்ளைகள்; மூத்தவன் சலன் என்பவன். அவனுக்குப்பட்டாபிஷேகம் செய்து விட்டுப் பரீக்ஷித்து காட்டிற்குச் சென்றான்.

சலன் ஒரு நாள் வேட்டையாடச் சென்று ஒரு மானைத் தொடர்ந்து அதனைப் பிடிப்பதற்கு,'தேரைவேகமாக ஓட்டுவாயாக!' என்று பாகனை ஏவினான். பாகன் 'இந்த மானைப் பிடிப்பதற்கு வாமதேவருடைய குதிரைகளைத் தேரிலே பூட்டினாலும் ஆகாது' என்றான். சலனுக்கு அக்குதிரைகளைப் பெற வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. அப்படியே வாமதேவருடைய ஆசிரமத்திற்குச் சென்றான். அங்கே முனிவரை வணங்கி'உம்முடைய குதிரைகளைத் தரவேண்டும்' என்று வேண்டினான். வாமதேவர், "மன்னனே! குதிரைகளை ஓட்டிக்கொண்டு போய் அந்த மானைப் பிடித்ததும் குதிரைகளை என்னிடம் திரும்பக் கொண்டு வரவேண்டும்!" என்றார். 'அப்படியே ஆகட்டும்' என்று அவைகளைத் தேரிலே பூட்டிக்கொண்டு போய் அந்த மானைப் பிடித்தான். மானோடு தேரைத் தன்னுடைய நகரத்துக்கு ஓட்டிக் கொண்டு போய், தேர்ப்பாக! இவை முனிவருக்கு எதற்கு? நமக்கே இவை தக்கவை!" என்று குதிரைகளை அரண்மனையிலே கட்டிவிடச் செய்தான். முனிவர் ஒருமாதமான பின்பும் அரசன் வாராததைக் கண்டு சிஷ்யனை அழைத்து, "ஆத்திரேய! நீ அரசனிடம் சென்று, வாமதேவரின் குதிரைகளை அனுப்புவாயாக! என்று சொல் என்றார். அவனும் அவ்வாறே சென்று அரசனிடம் சொல்லவே, அவ்வரசன், "பிராம்மண! பிராம்மணர்களுக்குக் குதிரைகள் எதற்கு? இவை இரத்தினங்களுக்குச் சமானமானவை, அரசருக்கே உரியன. ஆகையால் குதிரைகளைத் தரமாட்டேன்!" என்றான். பிறகு வாமதேவர் தாமே அரசனிடம் சென்று தம் குதிரைகளைத் தரும்படிக் கேட்டார். அதற்கு அவ்வரசன், "முனிவரே! பிராம்மணர்களுக்குரிய வாகனம் காளைமாடுகளும் வேதமும். இதோ இவ்விரண்டு காளைகளையும் உமக்குத் தருகிறேன்! குதிரைகள் மன்னருக்கேஉரியன அன்றோ?" என்றான். "வேதங்கள் எம்மை பரலோகத்திலே தாங்கிச் செல்வன. இங்கு எமக்கு இக்குதிரைகளே வாகனங்கள்!" என்றார் அம்முனிவர்.

அரசன் ஒரே அடியாய்த் தரமாட்டேன் என்றதும் வாமதேவருடைய தவப்பெருமையாலே அநேக அரக்கர்கள் தோன்றி அவ்வரசனைக் கொன்றுவிட்டார்கள். பிறகு சலன் தம்பி தளன் அரசனானான். வாமதேவர் அவனிடம் சென்று தம்முடைய குதிரைகளைத் திரும்பக் கேட்டார். அவன் அம்முனிவரைக் கொல்வதற்கு ஒரு அம்பை எய்தான். அது வாமதேவருடைய பெருமையாலே திரும்பிச் சென்று தளனுடைய பத்து வயதுப் பிள்ளையான சியேனசித்து என்பவனைக்கொன்றது. அதைக் கண்டதும் தளன் வேறொரு பாணத்தை வாமதேவரின் மீது தொடுப்பதற்காக வில்லை வளைத்தான். ஆனால் அம்பை எய்வதற்கு அவனுக்குப் பலமில்லாமற் போய்விட்டது. வாமதேவர், "அரசனே! நீ இந்தப் பாணத்தை உன் மனைவி மீது பிரயோகித்தால் பிரம்மஹத்திப் பாபம் உன்னை விட்டு விலகும்!" என்றார். மன்னனுடைய அம்பும் ராணி மீது பாய்ந்தது. ராணி முனிவரைப்பார்த்து, "வாம தேவரே! என்னைப் புண்ணியபத்தினி என்று அறிவீர்! எனக்கு நற்கதி கிடைக்க வேண்டும்!" என்றாள். வாமதேவரும், "உன்னால் இவ்வரசகுலம் பாபத்தினின்றும் காக்கப்பட்டது. நீ உயிர்பெற்று உன் கணவனும் பாபத்தினின்று நீங்கினவனாகி, இருவரும் மக்களுடன் இனிது வாழ்வீர்களாக!' என்று ஆசிர்வதித்தார். தளனும், "வாமதேவரே! உம்முடைய பெருமையை உணர்ந்தேன்!" என்று அவரை வணங்கி அவருடைய குதிரைகளைத் திருப்பிக்கொடுத்தான் என்றார்.

### இந்திரனுக்கும் பகமுனிவருக்கும் சம்வாதம்.

பிறகு தருமபுத்திராதிகள் மார்க்கண்டேயரிடமிருந்து சிரஞ்சீவியான பகமுனிவருக்கும் இந்திரனுக்கும் சுகதுக்கங்களைப்பற்றி நிகழ்ந்த சம்வாதத்தைக் கேட்டறிய விரும்பவே, மார்க்கண்டேயர் சொல்லத் தொடங்கினார்:—

"கேளும், தருமநந்தனரே! தேவாசுர யுத்தத்தில் வெற்றி பெற்று இந்திரன் மூவுலகுக்கும் அரசனானான். அப்போது எங்கும் சுபிக்ஷமாய் இருந்தது. ஜனங்கள் க்ஷேமமாய் தர்மிஷ்டர்களாய் இருந்தார்கள். இந்திரன் ஒருநாள் பூமி சஞ்சாரஞ் செய்வதற்காக ஐராவதத்தில் ஏறிச்சென்று பகமுனிவரின் ஆசிரமத்தை அடைந்தான். ஐராவதத்தினின்று இறங்கித்தம் ஆசிரமத்திற்கு வந்த இந்திரனை விதிப்படி அம்முனிவர் பூஜித்தார். இந்திரன் அவரை நோக்கி, "முனிவரே! நீர் நூறாயிரம் வருஷங்கள் வாழ்ந்திருக்கிறீர்! உம்மைப் போன்ற சிரஞ்சீவிகளுக்கு எது துக்கம் ஆகிறது?" என்றுகேட்டான்.

'இந்திர! எங்களுக்குத் துக்கம் மூன்று வகைப்பட்டது. அன்பில்லாதவருடன் வசிப்பது ஒன்று; அன்புடையோரைப் பிரிய நேர்வது ஒன்று. துஷ்டர்களின் சகவாசம் ஒன்று. மக்கள் மனைவி உற்றார் உறவினர் இவர்களின் மரணம்; பிறருக்கு வசப்பட்டிருத்தல்; தனிகர்களால் அவமதிக்கப்படுதல் ஆகியவை நிறைந்த மானுடப் பிறப்பே துக்கம்!" என்றார். இந்திரன் அதைக் கேட்டு, "சிரஞ்சீவிகளுக்கு சுகம் எது?" என்று கேட்டான். அதற்கு அம்முனிவர், "சிஷ்டர்களான நண்பர்களைப் பெறுவதும் பிறருக்குச்சேவை செய்யாதிருப்பதும் அதிதிகளுக்கும் பிதுருக்களுக்கும் பந்துக்களுக்கும் உணவளித்துப்பின் தன் வீட்டிலேயே உண்பதும் சுகம். அதிதி உண்ணும் உணவு பல்லாயிரம் பசுக்களைத் தானஞ் செய்த பலனைத் தருவதாகுமன்றோ?" என்றார். இவ்வாறு சம்பாஷித்தபின் இந்திரன் தன்னுலகுக்குச் சென்றான் என்றார்.

மார்க்கண்டேயர் இவ்வாறு சொல்லவும், பாண்டவர்கள், "முனிவரரே! க்ஷத்திரியர்களின் பெருமையையும் நீரே சொல்ல வேண்டும்!" என்று பிரார்த்திக்க, முனிவர் சிபியின் கதையைச் சொன்னார்.

(தொடரும்.)

# பிரபஞ்சத்தின் உண்மை யாது?

## நக்ஷத்திரங்களின் ஆயுள்

(ஸ்ரீமான் எம். வி. ராமகிருஷ்ணன் எழுதியது)

சூரியமண்டல முழுவதும் தேடியும், ஜீவராசிகள் இருப்பதற்குத் தகுதியான இடங்கள் அநேகம் காணப்படவில்லை; நமது பூமியிலிருக்கும் ஜீவராசிகளைப் போல், சுக்கிரனிலும், அங்காரகனிலும் ஜீவப் பிராணிகள் இருக்கக்கூடுமென்றுதோன்றுகிறது. சூரிய மண்டலத்தை விட்டு வெளிக்கிளம்பினால், மற்றெந்த இடங்களில் ஜீவராசிகள் இருக்கக் கூடும்? கொதிக்கும் வாயு உருண்டைகளாகிய நக்ஷத்திரங்களில் ஜீவப் பிராணிகள் இருக்க முடியாது. நக்ஷத்திரத்திலிருந்து தகுந்த தூரத்திலிருக்கும் ஒரு கிரகமே ஜீவராசிகள் இருப்பதற்கு வசதியான இடம். ஆனால் ஸர் ஜேம்ஸ் ஜீன்ஸ் நிறுவிய கொள்கையை ஏற்றுக்கொண்டால், இப்பிரபஞ்சத்தில் கிரக மண்டலங்கள் அரிதாகவே யிருக்கவேண்டும்; லக்ஷ நக்ஷத்திரங்களில் ஒரு நக்ஷத்திரத்துக்கே கிரகங்களிருக்கக் கூடுமென்று ஜீன்ஸ் கணக்கிட்டிருக்கிறார். எனவே பிரபஞ்சத்தில் ஜீவராசிகள் இருக்குமிடங்கள் வெகு குறைவு. "என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு" என்று இயேசு கிறிஸ்து மொழிந்த சொற்கள் ஜீன்ஸ் நிறுவிய கொள்கைக்குப் பொருந்தவில்லை. இப்பிரபஞ்சத்தில் வாசஸ்தலங்கள் அநேகமில்லையென்று சாற்றுகிற ஜீன்ஸின் கொள்கையை வான சாஸ்திரத்திலும் மற்ற சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்ற பர்மிங்ஹாம் பிஷப் இவ்வருஷம் நடந்த சாஸ்திர அபிவிருத்தி மஹா சபைக் கூட்டத்தில் மறுத்தார். கிரக மண்டலங்கள் ஜீன்ஸ் நிறுவிய கொள்கையின் படி மட்டுமல்ல, மற்ற விதமாகவும் உற்பத்தியாகக் கூடுமென்று அவர் மொழிந்தார். அவர் கட்சியில் இரண்டு வான சாஸ்திரிகளும் சேர்ந்து கொண்டனர். ஆர். ஏ. ஸாம்ப்ஸன் என்பவரும், க்ரீன்விச் சோதி மண்டபத்திலிருக்கும் ஜாக்ஸன் என்பவரும் ஜீன்ஸ் நிறுவிய கொள்கையின் படித்தான் கிரகங்கள் உற்பத்தியாயிருக்க வேண்டுமென்பதில்லை; வேறுவிதமாகவும் உற்பத்தியாயிருக்கக் கூடுமென்றார்கள்.

வானத்தில் நக்ஷத்திரம் சுழன்று, சுழற்சியின் காரணமாக இரண்டு துண்டுகளாகப் பிளவுபடுங்காலத்தில், இரண்டு சுத்தத்துண்டுகள் மட்டுமல்ல; மற்றும் சிறிய வாயுத்துளிகள் அநேகம் ஏற்படக்கூடும். களி அல்லது பாகுபோன்ற ஒரு பதார்த்தத்தை நாம் இரண்டு துண்டுகளாக்கினால், அவ்வாறு துண்டுகள் ஏற்படும்போது, சிறிய பாகுத்துண்டுகள் அல்லது துளிகள் சிதறுவன போல, இரட்டை நக்ஷத்திரங்கள் உற்பத்தியாகுங்காலத்தில் சிறு வாயுத்துளிகள் ஏற்படக் கூடுமென்றுஸாம்ஸன் சொல்லுகிறார். அந்தச் சிறு வாயுத் துளிகள் இரட்டை நக்ஷத்திரங்களினாட் சிக்குட்பட்டு, அவைகளைச்சுற்றித் திரியும் கிரகங்களாகிவிடக்கூடும். வானத்திலே கணக்கில்லா இரட்டை நக்ஷத்திரங்களிருக்கின்றன. ஸாம்ப்ஸன் கொள்கையின்படி, ஒவ்வொரு இரட்டை நக்ஷத்திரங்களைச் சுற்றியும் கிரகங்கள் இருக்க வேண்டும். அவ்வாறிருந்தால் அவற்றில் சில கிரகங்களிலாவது ஜீவராசிகள் இருக்கக் கூடும்.

ஜாக்ஸன் என்பவர் இரட்டை நக்ஷத்திரங்களுக்குக் கிரகங்கள் உண்டு என்று வேறு விதமாகக் காண்பித்திருக்கிறார். நக்ஷத்திரங்கள் உற்பத்தியாகுங்காலத்தில், வானத்தூமிசையினின்றும் வெளிப்படும் வாயு சிறு துளிகளாகி, அத்துளிகளில் இரண்டு ஒன்றினாட்சியில் மற்றொன்று உட்பட்டு இரட்டை நக்ஷத்திரங்களாவதுபோல, இன்னும் சிறு வாயுத்துளிகள் இந்த இரட்டை நக்ஷத்திரங்களின் ஆட்சிக்குட்பட்டு, அவைகளைக் கிரகங்களைப் போல் ஏன் சுற்றுதல் கூடாது? ஆகவே, கிரக மண்டலங்கள் இவ்விதங்களாகவும் உற்பத்தியாகக் கூடும். ஜீன்ஸின் கொள்கைப்படி நமது சூரிய மண்டலம் உற்பத்தியாயிருக்கலாம். ஆனால் பிரபஞ்சத்தில் கிரகங்கள் அக்கொள்கையின்படிதான் உற்பத்தியாதல் வேண்டும் என்பதற்குத் தகுந்த ஆதாரங்கள் காணப்படவில்லை.

ஸாம்ப்ஸன், ஜாக்ஸன் இவர்களின் கொள்கையைக் கைக்கொண்டால், வானத்தில் காணப்படும் நக்ஷத்திரங்களில் அநேகத்துக்குக் கிரகங்களிருக்கக் கூடும். அக்கிரகங்களில் காற்றும் தண்ணீரும் இருந்து சீதோஷ்ணஸ்திதியும் சரியாகவிருந்தால், ஜீவராசிகள் அவைகளில் வசிக்கக்கூடும். ஆனால் அந்தக் கிரகங்களைத் தூரதிருஷ்டிக் கருவியினால் பார்க்கவாவது, அவைகளில் ஜீவராசிகள் இருக்கின்றனவாவென்று அறியவாவது முடியாது. ஆதலால் அவ்விடங்களில் ஜீவராசிகள் இல்லையென்றும் நமது பூமியில் தான் ஜீவராசிகள் இருக்கின்றனவென்றும் சொல்லுவது ஒரு சாக்கடைத் தண்ணீர் சொட்டில் வசிக்கும் புழுக்கள் அச் சொட்டைத் தவிர மற்ற விடங்களில் ஜீவப் பிராணிகள் இல்லையென்பதையொக்கும்.



சூரியன்.

### சூரியனின் கிரண சக்தி.

இப்பிரபஞ்சத்தில் ஜீவராசிகள் இருப்பதற்கு வசதியான இடம் ஒரு நக்ஷத்திரத்திலிருந்து தகுந்த தொலையிலிருக்கும் ஒரு கிரகமேயென்று கண்டோம். பிரம்மாண்டமான பிரபஞ்சத்தில் கேவலம் மாசுபோன்ற பூமியில் ஜீவப் பிராணிகளும் அறிவில் சிறந்த மனிதர்களும் உயிர்வாழ்வதற்குத் துணையாக விருப்பது சூரியனே. கிரகங்களுடன் ஒப்பிடச் சூரியன் அதிக வண்ணமுள்ளதாகையால், தனது இழுத்தத்தின் ஆட்சிக்குக் கிரகங்களை உட்படுத்தி, தன்னைச் சுற்றிவரும்படிச் செய்கிறது. அவ்வாறு சுற்றிவரும் கிரகங்களிலொன்றாகிய பூமி சூரியனிலிருந்து தகுந்த தூரத்திலிருப்பதால், சரியான வெப்பமும் வெளிச்சமும் அதற்கு ஏற்பட்டு, ஜீவராசிகளை ஆதரிக்கும் சக்தியும் அதற்கு உண்டாகிறது. சூரியனின் உதார குணத்தினாலேயே நாம் ஒவ்வொரு நிமிஷமும் உயிர்வாழ்கின்றபடியால், இவ் வுதார குணத்தைச் சூரியன் எக்காலமும் உடைத்தாயிருக்க வல்லவனாவென்று கவனிப்பது அவசியம். சூரிய பகவான் தனது மனதைமாற்றி, பூமிக்குக் கிரணம் கொடுப்பதை நிறுத்திவிட்டால், அந்நிமிஷமே பூமியிலிருக்கும் ஜீவராசிகள் அத்தனையும் அழிந்து விடும். தற்கால வான சாஸ்திரிகள் சூரியன் விஷயமாயும் நக்ஷத்திரங்கள் விஷயமாயும் செய்துவரும் ஆராய்ச்சிகளைக் கவனிக்குங்கால், சூரியனின் உதார குணத்தில் மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றனவென்றே தோன்றுகிறது. இம்மாறுதல்கள் எவ்வாறு ஏற்படுகின்றன; எந்த ஊற்றிலிருந்து சூரியனும் நக்ஷத்திரங்களும் கிரணத்

தை வாரி இறைக்கின்றன; எக்காலம் வரை நமது சூரியன் நமக்குக் கிரணம் கொடுத்துக் கொண்டு வருவான் என்னும் விஷயங்களைப்பற்றி இனி கவனிப்போம்.

### ராபேர்ட் மேயர் செய்த ஆராய்ச்சி

சூரியனினின்றும் நக்ஷத்திரங்களினின்றும் அச்சத்தை உண்டாக்கத் தக்கதாகக் கிரணம் சொரிவது எவ்வாறென்று முதன் முதல் ஆராய்ந்தவர் ராபேர்ட் மேயர் என்ற ஓர் வான சாஸ்திரி. நக்ஷத்திரங்கள் கொதிக்கும் வாயு உருண்டைகளென்றால், வெகு காலம் எரிந்து கொண்டிருக்கும் சக்தி அவைகளுக்கு எவ்வாறு உண்டாயிற்று? சூரியன் ஒரு பிரம்மாண்டமான நிலக்கரி உருண்டையென வைத்துக் கொண்டால், அது ஆறாயிரம் வருஷங்களில் எரிந்து, அதற்குப்பின் அவிந்து போயிருக்க வேண்டும். ஆனால் எளிதில் நெருப்புப் பற்றத்தக்க பதார்த்தங்கள் சூரியனில் இருக்க வேண்டுமென்றல்ல; வேறு விதங்களிலும் சூரியன் சதாகாலமும் எரிந்து கொண்டிருக்கக் கூடும். நமது கண்களுக்குப் புலப்படாத வஸ்துக்கள் சூரியனைச் சுற்றி வருங்கால், நமது பூமியின் வாயு மண்டலத்தினுள் பிரவேசித்து வாயுமண்டலத்திலிருக்கும் வாயுவுடன் உரசி, தீப்பற்றி, விண்வீழ்க் கொள்ளிகளாக எரிந்து பூமியில் விழுவதுபோல, சூரியனின் வாயுமண்டலத்தினுள்ளும் கணக்கில்லா வஸ்துக்கள் பிரவேசித்து, விண்வீழ்க் கொள்ளிகளாகச் சூரியனில் விழுந்து அதன் உஷ்ணத்தை அதிகப்படுத்துதல் ஏன் கூடாது? இவ்வாறு சூரியனின் வாயு மண்டலத்தினுள் பிரவேசிக்கும் விண்வீழ்க்கொள்ளிகள் பூமியின் வண்ணத்துக்குச் சமமான மொத்த வண்ணங் கொண்டால், அவைகள் சூரியன் கிரணம் கொடுக்கும் சக்தியை 95 வருஷகாலம் அதிகம் நீடித்து விடக் கூடுமென்று மேயர் ஸ்தாபித்தார். ஆகவே, இவ்வண்ணத்தில் நூறிலொரு பாகம் வண்ணமுள்ள விண்வீழ்க்கொள்ளிகள் சூரியனில் ஒவ்வொரு வருஷமும் விழுந்தால், சூரியன் கிரணம் கொடுக்கும் சக்தியில் குறைவு படாமல் விளங்கக் கூடும். பூமியிலிருப்பவர்களும் ஒரு விதக் கவலையுமில்லாமல் இருக்கலாம். :ஆனால், அவ்வாறு வருஷா வருஷம் பூமியின் வண்ணத்தில் நூறிலொரு பாகம் வண்ணமுள்ள விண்வீழ்க் கொள்ளிகள் விழுந்து கொண்டிருந்தால், நமதுபூமி அவ்விண்வீழ்க்கொள்ளிகள் சிலவற்றைத் தாக்கும்; அது காரணமாக நமது பூமியின் பரப்பில் ஒரு சதுரமைலுக்கு 50 டன் நிறையுள்ள விண்வீழ்க் கொள்ளிகள் விழவேண்டும். அப்படி ஒன்றும் விழக்காணோம். மேலும், சூரியனின் கிரண நிலை விண்வீழ்க்கொள்ளிகளினால் ஏற்படுகிறதானால், 3 கோடி வருஷங்களில், அதன் வண்ணம் இரட்டிப்படைந்து விடும். சூரியனின் வண்ணம் இந்த விதமாக அதிகரிக்கவில்லையென்பது திண்ணம்; சரியாகக் கூறுமிடத்து நக்ஷத்திரங்கள் கிரணம் கொடுப்பதன்காரணமாக, வண்ணத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக இழக்கின்றன. ஆகவே, மேயர் நினைத்த பிரகாரம் நக்ஷத்திரங்கள் கிரணம் கொடுக்கும் சக்தியை வெளியிலிருந்து வரும் வஸ்துக்களினால் நிலை நிறுத்தவில்லை.

### ஹெம் ஹோல்ட்ஸ் நிறுவிய கோள்கை.

கி. பி. 1854ல் ஹெம்ஹோல்ட்ஸ், லார்ட் கெல்வின் என்னும் இரு மெய்ப்பாளர்கள் சூரியனின் உஷ்ணம் புதுப்பிக்கப்படுவது அதனுள் ஏற்படும் மாறுதல்களினாலேயன்றி, வேறு வெளியிலிருந்து வரும் வஸ்துக்களினாலல்லவென்று உறுதி மொழிந்தார்கள். லேனின் விதிப்படி நக்ஷத்திரமொன்று கிரணம் கொடுப்பதன் காரணமாகச் சுருங்கி, அதன் உட்புற உஷ்ணம் அதிகரிக்கவேண்டும். இவ்வாறு நக்ஷத்திரம் சுருக்கமடைவதினால் அதன் உட்புற உஷ்ணம் புதிப்பிக்கப்படுகின்றதென்று ஹெம்ஹோல்ட்ஸும், கெல்வின் பிரபுவும் கூறினார்கள். ராபேர்ட் மேயர் வெளியிலிருந்து வஸ்துக்கள் சூரியனில் விழுவதால், அதன் உஷ்ணம் புதிப்பிக்கப்படுகிறதென்றார். இவர்கள் சூரியனைத் தன்னுள் விழுவதனால் உஷ்ணம் புதுப்பிக்கப் படுகிறதென்றார்கள். ஹெம்ஹோல்ட்ஸ் கூறினபடி சூரியனின் உஷ்ணம் புதிப்பிக்கப்பட்டால் சூரியன் வருஷா வருஷம் விட்டத்தில் 300 அடி சுருங்க வேண்டும். இந்தச் சுருக்கம் மிகவும் நுட்பமானதால், அதைக் கண்டுபிடிப்பது இயலாது. அளக்குதற்குரிய சுருக்கம் ஏற்பட நாம் வெகுகாலம் காத்திருக்கவேண்டும். ஆனால் சூரியன் ஒரு நக்ஷத்திரமாகையால், இந்தச் சுருக்கம் நக்ஷத்திரங்களிலும் ஏற்பட வேண்டும். டெல்டா செபியை என்னும் வேறுபடுகின்ற நக்ஷத்திரம் சூரியன் கொடுக்கும் கிரணத்துக்கு 700 மடங்கு அதிகக் கிரணம் கொடுக்கிறது. அதன் விட்டமும் வண்ணமும் வான சாஸ்திரிகள் அறிந்திருக்கின்றனர். ஆகவே, இவ்வளவு அதிகக் கிரணம் கொடுக்கும் நக்ஷத்திரம் வருஷா வருஷம் 40,000த்தில் ஒரு பாகம் அதன் விட்டத்தில் குறைவடைய வேண்டும். இந்த நக்ஷத்திரம் கி.பி. 1785 முதல் பரிசோதிக்கப்பட்டு வருகிறது. கி. பி. 1785லிருந்து 1932 வரை அதன் விட்டம் 300ல் ஒரு பாகம் குறைந்திருக்க வேண்டும். இந்தக் குறைவை அந்நக்ஷத்திரத்தின் பிரகாச வேற்றுமைப் பருவத்தை யறிந்து கண்டு பிடிக்க இயலும். அவ்வாறு பிரகாச வேற்றுமைப் பருவத்தில் இதுவரை வித்தியாச மேற்படவில்லை. ஆகவே, நக்ஷத்திரம் சுருங்கவில்லையென்று ஏற்படுகிறது. மேலும், ஹெம் ஹோல்ட்ஸ் இவ்வாராய்ச்சியைச் செய்த காலத்தில், கிரணஅழுத்தவிஷயமாய்வான சாஸ்திரிகள் ஒன்றும் அறிந்திலர். முன் வியாசங்களில் கவனித்தபடி, கிரண அழுத்தம் அசட்டைசெய்யத்தக்கதல்ல. எனவே, ஹெம்ஹோல்ட்ஸ் நிறுவிய கொள்கை ஒப்புக் கொள்ளத் தக்கதல்ல.

### நக்ஷத்திரங்களின் ஆயுள்காலம்.

கி. பி. 1915-ல் அயின்ஸ்டைன் என்பவர் ஜடப்பொருளைப் போல் ஒளிப் பொருளும் இழுத்தத்தின் ஆணைக்குட்பட்டதென்று ஸ்தாபித்தார். அப்படி ஒளியும் இழுத்தத்தின் ஆட்சிக்கு உட்பட்டதென்று 1919-௵ மே௴ 29௳ நிகழ்ந்த சூரிய கிரகணத்தன்று மெய்ப்பிக்கப்பட்டது. ஆதலால், நக்ஷத்திரத்தின் ஒளிக்கு நிறையும் உண்டு என்று ஏற்படுகிறது. அப்படி ஒளிக்கு நிறையுண்டானால், நக்ஷத்திரங்கள் ஒளி கொடுக்குங்கால், அவைகளின் வண்ணம் குறைவடையும். ஆகவே, நக்ஷத்திரங்கள் தங்களுடைய வண்ணத்தையிழந்தே ஒளி கொடுக்கின்றன; அவ்வாறு இழந்த வண்ணத்தை திரும்ப அடைய இடமில்லை.

எனவே, நக்ஷத்திரமொன்று எவ்வளவு காலம் கிரணம் கொடுக்கக்கூடுமென்பது அதன் வண்ணத்தைப் பொருந்தும். ஒரு ஜலாசயத்தின் பரிமாணத்திலிருந்தும், அதிலிருந்து வெளிப்படும் ஜலவேகத்திலிருந்தும், எவளவு காலம் அந்த ஜலாசயத்திலிருந்து தண்ணீர் வரக்கூடுமென்று கணக்கிடப்படுவதுபோல, ஒரு நக்ஷத்திரத்தின் வண்ணத்திலிருந்தும், அது எவ்வளவு வேகமாய்க் கிரணம் கொடுக்கிறதென்ற அளப்பிலிருந்தும், அந்நக்ஷத்திரம் எவ்வளவு காலம் கிரணம் கொடுக்கக் கூடுமென்று கணக்கிட முடியும். ஆகவே, ஒரு நக்ஷத்திரத்தின் ஆயுளகாலத்தை நாம் வெகு எளிதில் கண்டுபிடிக்கலாம்.

(தொடரும்.)



# ஜம்புலிங்கம்

வ. தே. வரதன் எழுதியது

[முந்திய வாரங்களில் வெளியானதன் சுருக்கம்:—உலகநாதன், தன் நண்பர்களுடன் விலையுயர்ந்த பல நகைகளை எடுத்துக் கொண்டு திருச்சியிலிருந்து சென்னைக்கு மோட்டாரில் செல்லுகையில் பல்லாவரத்தில் சுந்தரம் பிள்ளை பங்களாவில் தங்கியிருக்கையில் சுந்தரம் பிள்ளை எவராலோ சுட்டுக் கொல்லப்படுகிறார். உலகநாதன் தலையணையின் கீழிருந்த நகைகளை ஜம்புலிங்கம் களவாடிச் சென்று விடுகிறான். நால்வரும் மோட்டாரில் தேடிச் செல்லுகையில் மோட்டார் பள்ளத்தில் விழுந்து சேதமாகி விடுகிறது. பிறகு உலகநாதன் முதலியோர் கத்திவாக்கத்தில் தங்கியிருக்கையில் பக்கத்து பங்களாவிலிருந்து ஜம்புலிங்கம் எல்லப்ப செட்டியார் மனைவியின் வைர நகைகளைக் களவாடிக்கொண்டு ஆற்றில் குதித்துவிடுகிறான். வெகு நேரமாகியும் அவன் வெளி வராததால் மூழ்கியிறந்து விட்டதாக நினைத்து உலகநாதன் முதலியோர் பங்களாவுக்குத் திரும்புகின்றனர். இவர்கள் உள்ளே பேசிக்கொண்டிருக்கையில் ஜம்புலிங்கம் வெளியே வந்து அடையாளச்சீட்டு வைத்துச்செல்லுகிறான். பிறகு ஆற்றுக்குச் சென்று ஸ்நானம் செய்கையில் ஜம்புலிங்கம் மறைந்த விடத்தில் கனகசபையும் மறைந்துவிடுகிறான். அவனைத் தேடிக்கொண்டு மூழ்கிய உலகநாதனும் வெளிவரவில்லை.]

தியாக:—இந்த மரக்காயனால் தான் இந்தக் கஷ்டமெல்லாம் ஏற்படுகிறது! ஆம்? அவனே தான்! எனக்கென்னமோ நிச்சயமாய்த் தோன்றுகிறது! ஜம்புலிங்கம் எங்கெங்கு தோன்றுகிறானோ அங்கெல்லாம் இந்த மரக்காயனும் காணப்படுகிறான். முதலில் சுந்தரம்பிள்ளை பங்களாவிலிருந்து, நகைகளைத் திருடிப் போன ஜம்புலிங்கத்தைப் பின் தொடரும் சமயத்தில், இவன் அங்குவந்து முளைத்தான். என் இந்த மரக்காயனே ஜம்புலிங்கமாயிருக்கக் கூடாது? ஜம்புலிங்கமோ முகத்தை நன்றாய் மூடிக்கொண்டிருக்கிறான்! இரண்டு கண்களுக்கு மட்டுமே இரண்டு துவாரங்கள் விட்டுவிட்டு மற்றப் பாகம் முழுதும் மூடிக் கொண்டு விடுகிறானகையால் நமக்கு அவனையடையாளம் கண்டு பிடிப்பது கஷ்டம். தவிர ஜம்புலிங்கம், அன்று ராத்திரி நாம் புறப்பட்ட நேரத்துக்கு வெகு நேரத்துக்கு முன்பே மோட்டாரில் ஓடி விட்டிருக்கிறான். பாதிவழியில் மோட்டாரை நிறுத்தித் தன்னுடைய வேஷத்தைக் கலைத்து விட்டு, என் ஒன்றும் தெரியாதவன் போல நம் எதிரில் திரும்பி வந்திருக்கக் கூடாது? போதாக் குறைக்கு, கனகசபை சொன்னபடி, ஜம்புலிங்கம் தப்பிப்போன வண்டியின் டயரும் குட்ரிச் கம்பெனியின் டயர். இந்த மரக்காயன் வண்டியிலும் அதே டயர் போடப்பட்டிருந்தது. இன்னும்வேறென்ன அத்தாக்ஷி வேண்டும்?

உலகநாதன் முழுகி ஐந்து



கனகசபை கை கால்கள் கட்டப்பட்டு ஒரு கோணிமீது கிடந்தான்.

நிமிஷத்துக்கு மேல் ஆகியும் அவன் மேலே வர வில்லை!

முத்து தண்ணீரில் குதித்து விட்டிருப்பான். ஆனல் அதே சமயம் அந்தச் சுவருக்கு அந்தப்புறம் இருந்து 'ஓஹோய்!' என்று ஒரு சப்தம் கிளம்பியது. சப்தம் வந்த திக்கை நோக்கிப்பார்க்க, அங்கு சுவருக்குமேல் உலகநாதனின் தலை தெரிந்தது.

உலக:—சீக்கிரம், படகை இந்தப் பக்கமாய்ச் செலுத்திக் கட்டிவிட்டு, அதோ அந்தப் பக்கத்துச் சுவர் சற்றுத் தாழ்ந்திருக்கிறது. அதன்மேல் ஏறிப்பாருங்கள்! சீக்கிரம்!

முத்து:—இதென்ன, கண் கட்டிமாயமால்ல ருக்கு! இங்கனே தண்ணிலேமுளுகினவரு பங்களாக்குள்ள போயிட்டாரே! என்று ஆச்சரியப்பட்டு கொண்டேபடகைஉலகநாதன் காட்டிய இடத்துக்குக் கொண்டு போய்க் கட்டினன். உடனே தியாகராஜுவுக்கு 'சரி, கனகசபையும் இதேமாதிரிதப்பித்துக்கொண்டிருப்பான்!' என்ற தைரியம் தோன்றியது. ஒரு நொடிக்குள் சுவரின் மேல் ஏறி மறுபக்கம் குதித்துவிட்டான். முத்துவும் உலகநாதன் உடைகளுடன் ஏறி வந்தான். உலகநாதன் அவர்கள் குதித்த இடத்துக்கு வந்தான்.

உலக:—ஜம்புலிங்கம் நேற்று மாயமாய் மறைந்தது எப்படியென்று கண்டு பிடித்து விட்டேன். கனகசபையும் அநேகமாய் இந்தக் கட்டடத்துக்குள் தான் எங்கேயாவது அடைக்கப்பட்டிருப்பான்!

என்று சொல்லி, ஈரச்சல்லடத்தைக் களைந்து விட்டு, முத்து விட மிருந்த தன் வேஷ்டியை வாங்கிக்கட்டிக்கொண்டே, 'தியாகு, அதோபார்! அங்கிருக்கும் குளத்திலிருந்து வெளியேயிருக்கும் ஆற்றுக்கு வாய்க்கால் மாதிரியாகப் பெரியவழி போகிறது! தண்ணீரடியில் முளைத்திருக்கும் நாணல் முதலியவை அந்த வழியைத் தெரியாமல் அடைத்துக் கொண்டிருக்கின்றன. நான் மூழ்கவும் தற்செயலாய் நாணலுக்குள் நுழைந்து செல்ல வழி போய்க்கொண்டேயிருந்தது. ஒரு வேளை இது பங்களாவுக்குச் செல்லும் ரகஸிய வழியாயிருக்கலாமோ வென்று தோன்ற, வெகு சீக்கிரமாய் இரண்டு நிமிஷம் நீந்திப்பிறகு மேலே கிளம்ப, அதோ அந்தப் பெரிய குளத்தின் மத்தியிலிருக்கக் கண்டு, கரையேறி உங்களைக் கூப்பிட்டேன்.

தியாக:—நான் எவ்வளவோ தேடினேனே! எனக்கு அந்த வழி தெரியவில்லையே.

உலக:—நீ நாணலைப் பார்த்துவிட்டுத்திரும்பி விட்டாய். ஆகையால் தான் உனக்குத் தெரியவில்லை. கனகசபையும் என்மாதிரியே இங்கு வந்திருக்கவேண்டும். அப்பொழுது, ஜம்புலிங்கமோ, அல்லது அவன் ஆட்களில் இன்னும் யாரேனுமோ அவனைப் பார்த்து விட்டிருப்பார்கள். அவனைத் தப்பவிட்டால், தங்கள் ரகஸியம் தெரிந்து விடுமென்று கருதி அவனைப் பிடித்து இங்கு எங்காவது ஓரறையிலடைத்து விட்டிருப்பார்கள். வாருங்கள் போய்ப் பார்ப்போம்!

என்று கூற அவ்விடத்தை விட்டு கட்டிடத்தை நெருங்கினார்கள். உள்ளிருந்து யாதொரு விதமான சந்தடியும் கேட்கவில்லை. பின் கதவு சாத்தப்பட்டிருந்தது. உள்ளே மனிதர்கள் இருந்து கொண்டுதான் சந்தடி செய்யாமல் இருக்கிறார்களா, அல்லது ஒருவருமேயில்லையா வென்பதை இவர்களால் தெரிந்துகொள்ள முடியவில்லை. தன்னுடைய கைத்துப்பாக்கியை எடுத்துத் தயாராய்ப் பிடித்துக்கொண்டான் உலகநாதன். தியாகராஜுவும், முத்துவும் இவனுக்குப் பின்னால் நின்றார்கள். பங்களாவின் பின்புறத்துக் கதவைப் பலமாய் இரண்டு மூன்றுதரம் தட்டினன். உள்ளிருந்துயாராவதுகதவைத்திறக்க வருகிறார்களாவென்று சப்தத்தைக் கவனித்தான். ஒரு விதமான சப்தமும் கேட்கவில்லை.

தியாக:—மெதுவான குரலில்; 'லோகு! சற்று நேரத்துக்குமுன் அந்த இப்ராஹீம் மரக்காயரைப் பார்த்ததாகச் சொன்னயே! அந்த மாக்காயன் தான் ஜம்புலிங்கமா? அல்லது ஜம்புலிங்கம் வேறே ஆசாமியா? எங்கெங்கு ஜம்புலிங்கம் தோன்றுகிறானே அங்கெல்லாம் இந்த மரக்காயனும் தோன்றுகிறானே! அதில் உனக்கு ஒரு சந்தேகமும் தோன்றவில்லையா?

உலக:-ஆம்! நானும் அதைக் குறித்துத்தான் சந்தேகப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நிச்சயமாகத் தெரிந்தாலொழிய வெளியிற் சொல்லக் கூடாதென்றிருந்தேன். நீயே இப்பொழுது சொல்லி விட்டாய். எனக்கும் உன்மாதிரி, சந்தேகமாகத்தானிருக்கிறது.

என்று சொல்லி, மறுபடியும் ஒரு தடவை பலமாகக் கதவையிடித்தான். கதவை யொ

ருவரும் திறப்பதாய்க் காணோம். உலகநாதன் ஒரு காரியத்தையெண்ணினால், கடைசி வரையில் ஒரு கை பார்த்து விடுபவனாகையால், கதவைத் தட்டிக் கொண்டிருப்பதில் ப்ரயோஜனமில்லையென்று எண்ணி, ஜன்னல் கதவு ஏதாவது திறந்திருக்கிறதாவென்று பார்த்துக் கொண்டே போனான். எல்லா ஜன்னல் கதவுகளும் மூடப்பட்டிருக்க, ஒரு ஜன்னல்கதவு மாத்திரம், வெளியே யிருந்த மரக் கதவு மூடப்படாமல், உள்புறமிருந்து கண்ணாடிக் கதவு மூடப்பட்டு உட்புறமாய் தாளிடப்பட்டிருந்தது. உடனே, கைத் துப்பாக்கிக் கட்டையால் கண்ணாடியை உடைத்து, உள்ளே கையை விட்டு, ஜன்னலைத் திறக்கவே எல்லோரும் உள்ளே இறங்கினார்கள். ஜம்புலிங்கம் விஷயத்தில் அதிக ஜாக்கிரதையாய் இருக்க வேண்டுமாகையால், கையில் துப்பாக்கியைத் தயாராகப் பிடித்துக் கொண்டு, தியாகராஜுவும் முத்துவும் பின்னால் வர, உலகநாதன் ஒவ்வொரு அறையாகச் சென்று தேடினான். கனகசபையை ஓரிடத்திலும் காணவில்லை. கடைசியாக ஓரறையில் தேடிக் கொண்டிருக்கும்பொழுது எங்கிருந்தோ, மனிதர் திணறும் சப்தம் கேட்டது.

உலக:—உங்களுக்குக் கேட்டதா?

தியாக:—ஆம்!யாரோ திணறும் சப்தம் கேட்டது! கீழிருந்தல்லவோ கேட்டதாகத் தெரிந்தது?

உலக:—கீழிருந்தா.

என்று நான்கு பக்கமும் உற்றுப் பார்க்க, ஒரு மூலையில் ஓர் கதவிருந்தது. அந்தக் கதவைத் திறந்தான். கீழே படிகள் செல்லுவதைக் கண்டு ஜாக்கிரதையாய் அதன் வழியே யிறங்கி, ஓர் நிலவறையை யடைந்தார்கள். அறைக்கு மேல் ஒரு சுவரிலிருந்த ஒரே ஜன்னலின் வழியாக வெளிச்சம் கொஞ்சமே வந்ததால், அறையில் இருக்கும் வஸ்து இன்னதென்று தெரிய இரண்டொரு நிமிஷம் பிடித்தது. ஒரு மூலையில், கோணி மூட்டையின்மேல் கனகசபை, கை கால்கள் கட்டப்பட்டு வாயில் துணியடைக்கப்பட்டுக்கிடந்ததைக் கண்டார்கள்.

தியாகராஜு:—ஆ! கனகசபை! என்று ஒரு நொடியில் அவனண்டையோடி வாயிலடைக்கப்பட்டிருந்த துணியையெடுத்து விட்டான். உலகநாதன்அதற்குள் தன்னிடமிருந்த ஒரு பேனாக் கத்தியால் அவன் கட்டுகளையவிழ்த்து விட்டு மெதுவாய்த் தூக்கிஉட்காரவைத்தான்.

தியாக:—உடம்பு என்ன செய்கிறது.

கனக:—உடம்புக்கு ஒன்றும் இல்லை! (தன் தலையின் அடிப்பாகத்தைமட்டும் காட்டி) இங்கு தான் இன்னும் வலிக்கிறது!

தியகராஜு அங்கு தன் கையினால் தடவிப் பார்த்து, "வீங்கியிருக்கிறதே! யாரடித்தார்கள் இப்படி?" என்று கேட்டான்.

கனக:—அந்தப் பயல் ஜம்புலிங்கம்தான். நான் அந்தக் குளத்திலிருந்து கரையேறுமுன், என் மண்டையில் ஒரு பலத்த அடிவிழுந்து என்னை ஸ்மரணை தப்பச்செய்துவிட்டது. நான் வந்ததை அந்த ஜம்புலிங்கம் பார்த்துவிட்டிருக்கவேண்டும். தன் ரகசியம் வெளியாய்விட்டதே என்று—!"

மீதியையும் சொல்லு முன், எங்கோ கதவு தடாலென்று சாத்தப்பட்டுத் தாழ்ப்பாளிடப்பட்டாற்போலச் சப்தம் கேட்டது. நால்வரும் திடுக்கிட்டனர். யாரோ நமக்குத் தெரியாமல் ஒளிந்துகொண்டிருந்திருக்கிறார்கள். அது அநேகமாய் ஜம்புலிங்கமாய்த்தானிருக்க வேண்டும் என்ற சந்தேகம் உலகநாதன் மனதில் தோன்ற, மடமடவென்று படிகளின் வழியாக ஏறிச் சென்றான். அவர்கள் வந்த கதவு சாத்தப்பட்டிருந்தது. நன்றாய் அமுக்கித் திறக்கப் பார்த்தான்! முடியவில்லை! கதவை உடைத்து விடலாமென்றாலோ, மிகவும் கனமாயிருந்தது. தங்களையும் அடைத்து விட்டானே என்றெண்ணிக்கொண்டிருக்கும் சமயம் வெளியே ஜம்புலிங்கம் நகைக்கும் குரல் கேட்டது.

## அத்தியாயம் 7

### மரக்காயரின் உதவி.

கனகசபையொருவனைத் தப்புவிக்கப்போய் மற்ற மூவரும் அந்த நிலவறையில் அகப்பட்டுக்கொண்டார்கள். தாங்கள் வந்த கதவை, தங்களால் ஆனவரையில் உடைத்தாவது எறிந்துவிட்டுத் தப்பிப்போகலாம் என்று ப்ரயத்தனப்பட்டார்கள். அக்கதவு அசைவதாகக் காணோம். கொஞ்சம் வெளிச்சம் வரும் ஒரே ஜன்னலைத்தவிர வேறு ஒரு வழியும் கிடையாது. அந்த ஜன்னலிலும் முக்கால் அங்குலக் கனமுள்ள கம்பிகள் போடப்பட்டிருந்தன. ஜன்னல் கம்பியைப் பெயர்த்தெடுத்துவிட முடியுமாவென்று பார்த்தார்கள். முடியவில்லை.

உலக:—பேஷ். சரியான பேர்வழி! நம் நால்வரையும் சாமர்த்தியமாயடைத்து விட்டானே! நம் கூச்சலைக் கேட்டு யாராவது வந்து தப்புவிப்பார்கள்என்றெண்ணுவதற்குமில்லை எனெனில் இதைச்சுற்றிச் சமீபத்தில் வேறொரு பங்களாவும் கிடையாது. மேலும் இந்தபங்களா ரோட்டிலிருந்து வெகுதூரம் உள்ளே தள்ளியிருக்கிறது. ஆகையால் நம்முடைய கூச்சல் அவ்வளவு தூரம் கேட்காது. இந்தத் தடவை தப்புவோமா என்பதே சந்தேகம்.

தியாக:—என்ன முட்டாள்தனம் செய்துவிட்டோம்! ஜம்புலிங்கத்தின் சங்கதி தெரிந்திருந்தும் மோசம் போனோமே! நம்மில் யாராவது ஒருவர் அந்த வாசல்படியிலேயே இருந்திருந்தால் இந்த ஆபத்து ஏற்பட்டிருக்காதே! ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு என்பது நம் மட்டில் சரியாய்ப்போய்விட்டது!

கனகசபை அங்கொரு மூலையில் சுருட்டி எறியப்பட்டிருந்த ஓர் கடிதத்தைப் பிரித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். தனக்கொன்றும் அர்த்தம் தெரியவில்லையாகையால் அதை உலகநாதன் கையில் கொடுத்தான். அவன் அதை வாங்கிப் பார்த்தான். அது ஒரு தந்தியாயிருந்தது. பாதி கிழிக்கப்பட்டுப் போய் இருந்ததால் எங்கிருந்து, எப்பொழுது வந்தது என்பதும் யாருக்கு வந்தது என்பதும் கூடச் சரியாகத் தெரியவில்லை.

......லிங்கம்.
கத்திவாக்கம்.

'பதினொன்று பதின்மூன்று ஒன்பது' என்றும் இன்னும் அர்த்தமில்லாத சில வார்த்தைகளும் இருந்தன.

உலகநாதன், இது ஏதோ ஜம்புலிங்கம் சம்பந்தமான நல்ல உளவு என்றும், அதன் அர்த்தம் மட்டும் தெரிந்தால் மிக்க அனுகூலமாயிருக்கும் என்றெண்ணினான். ஆனால்இந்தச்சமயம் எப்படித் தப்பிப்போவது என்பதே முக்கியக்கவலையாயிருந்ததால், அதைப்பற்றி யதிக நேரம் சிந்திக்க முடியவில்லை. அதையப்படியே மடித்துத் தன் சட்டைப்பையில் வைத்துக் கொண்டிருக்கையில் ஜன்னலுக்கு வெளியே ஏதோ சப்தம கேட்டதாய்த் தோன்றியதால், அதன்பக்கமாய் அடுக்கியிருக்கும் கோணி மூட்டைகளின் மேல் ஏறி ஜன்னல் வழியாய் வெளியே எட்டிப்பார்த்தான்.

ஜன்னலுக்கு வெளியே சுமார் இரண்டடி தூரத்தில் தாங்கள் பார்த்த உருவம்—அதே கருப்பு முகமூடி, உடம்போடு உடம்பாய் ஒட்டிய கருப்பு உடை—ஜம்புலிங்கம், ஒளிந்துகொண்டு அறைக்குள் எட்டிப் பார்ப்பதைக் கண்டான். உலக நாதனைக் கண்டதும், அவன்

"எனக்கே கஷ்டமாயிருக்கிறது! என்ன செய்வது? என் மேல் தப்பிதம் கிடையாது. உங்களை யார் என்னுடைய காரியத்தில் தலையிட்டுக்கொள்ளச் சொன்னது? என்னுடைய முக்யமான அநேக ரகஸியங்களில் ஒன்றை நீங்கள் கண்டுகொண்டு இனிமேல் எனக்கு இந்தவிடம் உதவாதபடிச் செய்து விட்டீர்களே?"

என்று சாந்தமாய்க் கூறிய போதிலும், அவன் வார்த்தைகளில் பொடி வைத்துப் பேசுகிறானென்பதை உலகநாதன் அறிந்து கொண்டான். தங்களுக்குமகத்தான ஆபத்து ஏற்படப் போகிறதென்று நிச்சயமாய் எண்ணி விட்டான்.

உலக:—நில்! அங்கேயே! (என்று ஒரு நொடிக்குள் தன் கைத்துப்பாக்கியை ஜம்புலிங்கத்துக்கு நேராக நீட்டிப்பிடித்துக் கொண்டு) ஒரு அங்குலம் நகர்ந்தாயானாலும் உன்னையப்படியே சுட்டுத்தள்ளி விடுவேன். சுந்தரம்பிள்ளையைக் கொன்ற கொலை பாதகனாகிய உன்னை இப்பொழுதே கொன்று விட்டால் கூடப் பாபம் கிடையாது.

ஜம்பு:—(சிரித்துக் கொண்டே) ஏன்! தாராளமாய்ச் சுடலாமே? என்னைச் சுட்டு விடுவதனால், நீங்கள் எப்படி அந்த அறையிலிருந்து தப்பப்போகிறீர்கள்? அதை யோசித்துக் கொண்டீர்களா?

உலகநாதன்தன்னைத்தானே நொந்து கொண்டான். இப்படியவன் எதிர்பாராமல் தங்களிடம் சிக்கிக்கொண்டிருந்தும் அவனைப் பிடிக்க முடியாதபடி, தாங்கள் உள்ளே யடைபட்டுக் கிடக்கிறோமே என்று மிகுந்த வருத்தமாயிருந்தது. இதற்குள் தியாகராஜுவும் மெதுவாக ஏறி உலகநாதன் பக்கத்தில் நின்றுகொண்டு ஜம்புலிங்கத்தைப்பார்த்தான். அவன் அலக்ஷியமாய் நின்றுகொண்டிருந்தான்.

தியாக:—அடே! திருட்டுப் பயலே! நாங்கள் இதைவிட்டு வெளியே வந்த பின், நீ ஓடித் தப்பிப்பிழைக்க மறந்து விடாதே! முகத்தை மூடிக்கொண்டு எங்களை ஏமாற்றி விட்டதாக எண்ணிக்கொள்ளாதே! அந்தக் கறுப்பு முக மூடியின் பின்னால் இருக்கும் முகம் எனக்கு நன்றாய்த் தெரியும். ஐயா மாக்காயரே......!

சட்டென்று வாயை மூடிக் கொண்டான். கோபத்தால் ஜம்புலிங்கத்தையின்னாரெனக் கண்டு கொண்டதாய்க் காட்டி விட்டோமே! இனியவன் தப்பி ஓடிவிடுவானே யென்று எண்ணினான்.

ஆனால் தியாகராஜுவின் வசை மொழிக்குப் பதில் ஒரு எளனச் சிரிப்புச் சிரித்தான் ஜம்புலிங்கம். அந்தச் சிரிப்பு அடங்குமுன் திடீரென மேலே தாவி மறைந்து விட்டான். அவன் அப்படித் திடீரென மறைந்து விடுவானென்பதையெதிர்பாராத உலகநாதன் தன்கையை ஜன்னலுக்குவெளியே நீட்டி மேல்நோக்கி இரண்டு மூன்று முறை சுட்டான். ஒன்றும் பிரயோஜனமில்லை. ஜம்புலிங்கம் தப்பியே போய் விட்டான். (தொடரும்.)

# வியாபாரப்பகுதி

## இந்தியா கவர்ன்மெண்டின் புதிய கடன்.

### சீமை ஜவுளியின் நிலைமை

### தங்க ஏற்றுமதியில் குறைவு

### வியாபாரக் குறிப்புகள்

சென்னை, ஆகஸ்டு 10—

**புதிய கடன்.**

இன்று கரன்ஸி கண்ட்ரோலரால் 5% கடன் 1940/43 அறிக்கையொன்று வெளியிடப்பட்டிருக்கிறது. இது ரூ 98% க்கு வெளியிடப்படும். 1940-ம் வருஷத்திற்கு பின்னும் 1943-ம் வருஷத்திற்குப் முன்னும் திருப்பிக் கொடுக்கப்படும். இதற்குப் பணம் ரொக்கத்திலாவது, 5% 1933-ம் வருஷ பாண்டுகளாகவாவது, 6% 1933/36 வருஷ பாண்டுகளாகவாவது செலுத்தலாம். ரூ. 25 கோடிவரை பணம் ஏற்றுக்கொள்ளப்படும். கடன் ஒன்று சீக்கிரத்தில் வெளியிடப்படும் என்று மட்டும் மார்க்கெட்டில் தெரியவந்தது. ஏனெனில் சர்க்கார் கடன் பத்திரங்கள் சென்ற சில வாரங்களாக அதிகரித்துக்கொண்டே வருகின்றன. இவைகளில் கடன்களின் வருமானத்தைவிட அதிகமாகக் கொடுக்கின்றன. முக்கிய காரணமாகச் சென்ற வார கரன்ஸி கண்ட்ரோலர் அறிக்கை டிரஷரி உண்டியல்கள் நிறுத்தப்படுமென்று கூறியதைச் சொல்லவேண்டும். இப்பொழுதுள்ள நிலைமையிலும், மார்க்கெட்டின் மேல்நோக்கத்தாலும் இக்கடனுக்குப் பூராத் தொகையும் சேரும் என்று நினைக்க இடமிருக்கிறது.

**நாணயமாற்றம்.**

நாணயமாற்ற மார்க்கெட் இவ்வாரத்தில் வலுவாகவிருந்தது. அடிக்கடி மாறுதல்கள் ஏற்பட்டபொழுதிலும் அதிகவியாபாரமில்லை, தங்கஏற்றுமதிக்காகப் பணம் அனுப்புவதைத் தவிர வேறெவ்விதத்திலும் பணம் அனுப்புவது கிடையாது. கரன்ஸி கனட்ரோலரின் அறிக்கைப்படி டிரஷரி உண்டியல்களும், மத்தியகால உண்டியல்களும் இனிமேல் ஏற்கப்படமாட்டாது என்ற செய்தி புதன்கிழமை ஒரு விதமாக மார்க்கெட்டைச்சுலபப்படுத்திய பொழுதிலும் மேலே கூறியபடி இவைகள் நீடிக்கவில்லை. தந்தி, தரிசன விகிதங்கள் 1/6—3/32 பென்ஸாக விருக்கின்றன. எதிர்காலத்திற்கு செப்டம்பருக்கு 1/6—1/16 பென்ஸாகவும், அக்டோபருக்கு 1/6—1/32 பென்ஸாகவும் நவம்பருக்கு 1 ஷில்லிங் 6 பென்ஸாகவுமிருக்கின்றன.

**ரொக்கக்கடை.**

இம்மார்க்கெட்டில் விகிதங்கள் சுலபமாக விருக்கின்றன. 7 நாள் தவணைக்கு 2% ஆகவும், 3 மாதம் வரையில் $2\frac{1}{2}$% ஆகவும், 6 மாதம் வரையில் $2\frac{3}{4}$% ஆகவும் இருக்கின்றன. இம்பீரியல் பாங்கி வட்டி 4%ல் மாறுதலில்லாம விருக்கிறது.

ஜூலை 29-ந் தேதியோடு முடிவாகிய இம்பீரியல் பாங்கி வரவுசெலவு இருப்பு யாதாஸ்தின்படி பப்ளிக் டிபாஸிட்டுகள் ரூ. 825·22லக்ஷமும், இதர டிபாஸிட்டுகள் ரூ. 61·27 லக்ஷமும் அதிகரித்திருக்கின்றன. சொத்துக்களில், கவர்ன்மெண்டு செக்யூரிடிகள். ரூ. 82·81 லக்ஷமும் இதர செக்யூரிடிகள் ரூ 11·81 லக்ஷமும் குறைந்திருக்கின்றன. கடன்களும் ரூ.9·65 லக்ஷம் குறைவு. ரொக்கக் கிரெடிட்கள், உள்நாட்டு உண்டியல்கள், வெளிநாட்டு உண்டியல்கள் முறையே ரூ. 1·05; ரூ. 55·69, ரூ 6·71 லக்ஷம் அதிகரித்திருக்கின்றன. ரொக்க இருப்பு ரூ. 449 05 லக்ஷம் குறைவு. வரவு செலவு விகிதம் 31·55 லிருந்து 35·45%க்கு அதிகரித்திருக்கிறது.

**தங்கம், வெள்ளி.**

லண்டன் நியூயார்க் குறுக்கு விகிதம் ஒவ்வொரு நாளும் கொஞ்சங் கொஞ்சமாக 3 50$\frac{1}{2}$ லிருந்து 3 47$\frac{1}{2}$ க்குக் குறைந்துகொண்டுவந்ததால் உள்ளூர் மார்க்கெட்டில் தங்க விலை ரூ. 28-9-0-விருந்து ரூ. 29-2-0-க்கு அதிகரித்தது. சவரன் விலையும் ரூ. 18-1-6-லிருந்து ரூ. 18-7-6 வரை அதிகரித்தது வியாபாரம் அதிகமாக நடக்கவில்லை.

வெள்ளி மார்க்கெட்டில் விலை ரூ 55-12-0-லில் அமைதியாக விருந்தது. வெள்ளி மீதுள்ள தீர்வை ஒரு முடிவிற்கு வரும் வரையில் விலைகள் அதிகரிக்க இடமில்லை. எதிர்கால வியாபாரமும் கொஞ்சமாகத்தான் நடக்கும்.

ஆகஸ்ட் 6-ந்தேதியோடு முடிவாகிய வாரத்தில் தங்க ஏற்றுமதியில் அதிகக் குறைவு காணப்படுகிறது. சென்ற சனிக்கிழமை மாலை லண்டனுக்குச் சென்ற "கார்பு" என்ற கப்பலில் ரூ. 73,23,014 மதிப்பிற்குற் தங்கம் ஏற்றுமதியாயிற்று. இதில் தங்கக்கட்டிகள் ரூ.23,44,337 க்கு ஆம்ஸ்டர்டாமிற்குச் சென்றன. பாக்கியுள்ளவை லண்டனுக்குச் சென்றன. இதில் ரூ 18,335 பெறுமானமுடைய 'ரூபிள்' நாணயங்களும் அடங்கியிருக்கின்றன.

இங்கிலாந்து தங்க நாணயச் செலாவணியிலிருந்து விலகிக் கொண்டபிறகு இந்தியாவின் சார்பாக பம்பாயிலிருந்து ஏற்றுமதியான தங்கத்தின் மொத்த மதிப்பு இதுவரை ரூ. 76,49,89,725.

**ஜவுளி நூல்.**

ஜவுளி மார்க்கெட்டில் மலையாளம் பக்கத்திலிருந்து 'ஓனம்' பண்டிகையை முன்னிட்டு ஏராளமாகக் கேள்விகள் வந்திருக்கின்றன. ஆனல் இவைகள் எவ்வளவு தூரம் வியாபாரத்தில் வந்து முடியும் என்பதைக் கூற முடியவில்லை. ஏனெனில் இன்னும் வியாபாரிகள் தயங்குவது காணப்படுகிறது.

தென்னிந்தியா முழுவதிலும் லங்காஷயர் வேஷ்டிகளின் சில ரகங்கள் இதற்கு முன் ஏராளமாக விற்பனையாகி வந்தன. ஆனல் இப்பொழுது இவைகள் மிகவும் பரிதாபகரமான நிலைமைக்கு வந்து விட்டன. இவைகளுக்குத் தேவையே கிடையாது. சில ஆமதாபாத் ரகங்கள் லங்காஷயர் துணிகளுடன் ஒத்திருக்கிறது. ஆகையால் வியாபாரிகள் சீமைத்துணிக்குப் பதிலாக இந்திய ஜவுளியை வாங்குவது ஆச்சரியமல்ல. இதைத் தவிர கைத்தறியில் நெய்யும் சில வேஷ்டிகள் நல்ல ரகங்களில் மார்க்கெட்டில் வர ஆரம்பித்திருக்கின்றன. இவைகள் தென்னிந்தியாவில் மட்டுமில்லாமல் வட இந்தியாவிலும் அதாவது மசூலிப்பட்டணம், செகந்தராபாத் முதலிய விடங்களிலும் அதிகமாக விற்பனையாகின்றன.

காப்பு வரிக் கமிட்டியார் கவர்ன்மெண்டிற்குச் சொல்லப்போகும் சிபார்சுகளும், அதன்மீது கவர்ன்மெண்டார் எடுத்துக்கொள்ளப்போகும் நடவடிக்கைகளும் விசேஷமாக எதிர்பார்க்கப்படுகிறது. தீபாவளியை முன்னிட்டு ஜவுளி மார்க்கெட்டின் மந்தம் நீங்குமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

நூல் மார்க்கெட்டில் வியாபாரம் அதிகமாக இல்லை எல்லா ரகங்களிலும் இவ்வாரம் சில்லரையாக வியாபாரம் காணப்பட்டன.

### நாணய மாற்றம்.

| | | பென்ஸ், |
|---|---|---|
| லண்டன் மேல் | | |
| தந்தி விற்கிற விலை | 18. | 1/16 |
| தரிசன உண்டி | | |
| விற்கிற விலை | 18. | 1/16 |
| தந்தி வாங்குகிற விலை | 18. | 1/8 |
| தரிசன உண்டி | | |
| வாங்குகிற விலை | 18. | 5/32 |
| 1-மாத தவணை ,, | 18. | 3/16 |

| | | | |
|---|---|---|---|
| 2-மாத தவணை | ,, | 18. | 3/16 |
| 3-மாத தவணை | ,, | 18. | 3/16 |
| 4-மாத தவணை | ,, | 18. | 7/32 |
| 5-மாத தவணை | ,, | 18. | 9/32 |

பிரான்ஸ் மேல் தரிசன உண்டி விற்பனை ரூ. 100-க்கு பிராங்கு 655

ஜர்மனி தரிசன உண்டி விற்பனை மார்க்குக்கு ரூ. 105

அமெரிக்கா தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரூ. 390

அமெரிக்கா தரிசன உண்டி வாங்குவது டாலர் 100-க்கு ரூ. 375

சிங்கப்பூர் தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரூ. 155½

சிங்கப்பூர் தரிசன உண்டி வாங்குவது டாலர் 100-க்கு ரூ. 150

ஹாங்காய் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரூ. 90

ஷாங்ஹாய் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை டாலர் 100.க்கு ரூ. 116.

ஜப்பான் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை என் 100-க்கு ரூ. 110

ஜப்பான் 2-மாத தவணை உண்டி வாங்குவது என் 100-க்கு ரூ. பெயரளவு

ஜாவா தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை 100-க்கு கில்டர் 64

ஜாவா தந்தி அல்லது தரிசன உண்டி வாங்குவது ரூ. 100 க்கு கில்டர் பெயரளவு

பாரிஸில் லண்டன் மேல் தந்தி பவுன் 1-க்கு பிராங்கு 88-9/16

லண்டனில் அமெரிக்கா மேல் தந்தி ஸ்டர்லிங் பவுன் 1-க்கு டாலர் 3·47

---

## வட்டி விகிதங்கள்.

இம்பீரியல் பாங்கு வட்டி 4%

பாங்க் ஆப் இங்கிலாந்து வட்டி 2%

## தங்கம், வெள்ளி.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| சவரன் | 18 | 7 | 6 |
| பம்பாய் கட்டி தங்கம் தோலா 1-க்கு | 29 | 2 | 0 |
| வெள்ளி ரூ. 100 எடை | 56 | 0 | 0 |
| ரூ. 1 எடை, | 0 | 9 | 6 |

---

## சர்க்கார்கடன் பத்திரங்கள்.

| | முதல் | | வரை. | |
|---|---|---|---|---|
| | ரூ. | அ. | ரூ. | அ. |
| 3½% கவர்ன்மெண்டு பேபர் | 68 | 8 | 70 | 0 |
| 4% கடன் 1931—36 | 95 | 10 | 97 | 2 |
| 4% கடன் 1934—37 | 94 | 10 | 96 | 2 |
| 4% கடன் 1960—70 | 78 | 8 | 80 | 0 |
| 4½% பாண்டு 1934 | 98 | 14 | 100 | 6 |
| 4½% கடன் 1955—60 | 89 | 2 | 90 | 10 |
| 4% யுத்தக்கடன் 1929—47 | 97 | 0 | 98 | 8 |
| 4% பாண்டு 1935 | 99 | 7 | 100 | 15 |
| 4% கடன் 1939—44 | 97 | 8 | 99 | 0 |
| 5% பாண்டு 1933 | 100 | 11 | 102 | 3 |
| 5% கடன் 1945—55 | 104 | 2 | 105 | 10 |
| 5% கடன் 1938—40 | 101 | 7 | 102 | 12 |
| 5% பாண்டு 1932 | 99 | 12 | 101 | 4 |
| 5% பாண்டு 1933—36 | 101 | 4 | 102 | 12 |
| 6½% டிரஷரி பாண்டு 1935 | 103 | 14 | 105 | 6 |
| 5% மைசூர் கடன் 1955 | 100 | 0 | 101 | 0 |
| 5½% மைசூர் கடன் 1938 | 103 | 0 | 104 | 0 |
| 6¼ மைசூர் கடன் 1940 | 107 | 4 | 108 | 4 |
| 5½ மைசூர் கடன் 1941—51 | 111 | 4 | 112 | 4 |

---

## சென்னை சுதேசி ஜவுளி மார்க்கெட்.

### தோவத்திகள்.

| | செ. | ரூ | அ. | பை. |
|---|---|---|---|---|
| அலர்வாமில்:— | | | | |
| சர்தார் | 6 | 2 | 3 | 0 |
| ,, | 7 | 2 | 9 | 0 |
| ,, | 8 | 2 | 15 | 0 |
| ஜுபிளி மில்:— | | | | |
| ராஜகோபால் | 6 | 2 | 9 | 0 |
| ,, | 7 | 3 | 0 | 0 |
| ,, | 8 | 3 | 7 | 0 |
| தேசபக்தன் | 8 | 3 | 6 | 0 |
| ,, | 9 | 3 | 14 | 0 |
| காலிகோ மில்:— | | | | |
| 501 சேலம்கரை | 6 | 2 | 8 | 0 |
| ,, ,, | 7 | 2 | 15 | 0 |
| ,, ,, | 8 | 3 | 6 | 0 |
| 461 ,, | 7 | 2 | 14 | 0 |
| 600 பூக்கரை | 6 | 2 | 9 | 0 |
| 700 ,, | 7 | 3 | 0 | 0 |
| 800 ,, | 8 | 3 | 7 | 0 |
| 900 ,, | 9 | 3 | 14 | 0 |
| மாம்பழம் | 6 | 2 | 8 | 0 |
| ,, | 7 | 2 | 15 | 0 |
| | 8 | 3 | 6 | 0 |
| 4000 லேசு | 4 | 2 | 0 | 0 |
| 6000 ,, | 6 | 2 | 14 | 0 |
| 7000 ,, | 7 | 3 | 6 | 0 |
| 8000 ,, | 8 | 3 | 14 | 0 |
| 9000 ,, | 9 | 4 | 6 | 0 |
| 10000 ,, | 10 | 4 | 14 | 0 |
| வி. ஜாவா | 8 | 5 | 0 | 0 |
| ,, | 9 | 5 | 10 | 0 |

### புடவைகள்.

| | | | | |
|---|---|---|---|---|
| காலிகோ மில்:— | | | | |
| 3296 வெள்ளை | 7 | 3 | 14 | 0 |
| ,, ,, | 8 | 4 | 6 | 0 |
| ,, சாயம் | 7 | 4 | 2 | 0 |
| ,, ,, | 8 | 4 | 10 | 0 |
| ,, ,, | 9 | 5 | 2 | 0 |
| 396 வெள்ளை | 7 | 3 | 2 | 0 |
| ,, ,, | 8 | 3 | 10 | 0 |
| ,, சாயம் | 5 | 2 | 10 | 0 |
| ,, ,, | 6 | 3 | 2 | 0 |
| ,, ,, | 7 | 3 | 10 | 0 |
| ,, ,, | 8 | 4 | 2 | 0 |
| 3496 ,, | 7 | 4 | 6 | 0 |
| ,, ,, | 8 | 4 | 14 | 0 |
| ,, ,, | 9 | 5 | 6 | 0 |
| B/368 வெள்ளை | 7 | 4 | 2 | 0 |
| ,, ,, | 8 | 4 | 10 | 0 |
| B/369 சாயம் | 8 | 4 | 10 | 0 |
| B/382 ,, | 7 | 4 | 10 | 0 |
| ,, ,, | 8 | 5 | 2 | 0 |
| 339 ,, | 6 | 4 | 4 | 0 |
| ,, ,, | 7 | 5 | 0 | 0 |
| ,, ,, | 8 | 5 | 12 | 0 |
| ,, ,, | 9 | 6 | 8 | 0 |
| B/402 ,, | 8 | 6 | 6 | 0 |
| ,, ,, | 9 | 7 | 3 | 0 |
| 45171 ,, | 8 | 5 | 2 | 0 |
| வாயில் புடவை | 5 | 3 | 6 | 0 |
| ,, | 6 | 3 | 14 | 0 |
| ,, | 7 | 4 | 6 | 0 |
| ,, | 8 | 4 | 14 | 0 |
| ,, | 9 | 5 | 6 | 0 |
| குலாப் காளி | 7 | 1 | 12 | 0 |
| ,, | 8 | 2 | 2 | 0 |
| ,, | 9 | 2 | 8 | 0 |
| ஸ்ரீமதி ,, | 7 | 4 | 10 | 0 |
| ,, ,, | 8 | 5 | 2 | 0 |
| ,, ,, | 9 | 5 | 10 | 0 |




## வெள்ளி நாணயம்.

(கௌசிகன் எழுதியது.)

இந்தியாவில் சாதாரணமாகச் செலாவணியாக இருப்பவை வெள்ளி நாணயங்களும் நிக்கல் செம்பு நாணயங்களுமே. இங்கிலாந்தில் ஷில்லிங்கும் அதன் பாகங்களும் வெள்ளி. பென்னி என்பது செம்பு. பவுன் நாணயம் தங்கம். எந்த நாணயமானாலும் அதன் மதிப்பைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமேயொழிய அது எதெது சேர்ந்து செய்யப்பட்டிருக்கிறது; எப்படிச் செய்யப்படுகிறது; எவ்விடத்தில் என்பவையெல்லாம் முக்கியமான விஷயமல்ல. நாம் தினம் தண்ணீர் அருந்துகிறோம். தண்ணீரில் ஜலவாயு ஒரு பங்கும் பிராணவாயு எடையில் இதைப்போல் எட்டுப்பங்கும் சேர்ந்திருப்பதாக எத்தனைபேருக்குத் தெரியும்? தாகத்துக்குத் தண்ணீர் குடிப்பதேயொழியத் தண்ணீரைப்பற்றி மேற்கூறிய உண்மை தெரியவேண்டும் என்ற அவசியமில்லை. சிலருக்கு ஜலம் இப்படி உண்டாக்கப்பட்டது என்று தெரிந்தாலும் அதையே தண்ணீர் குடிக்கும் போது நினைத்துக் கொண்டிருப்பார்களா? ரூபாய், அரை ரூபாய் வெள்ளி நாணயங்களென்றும், கால் ரூபாய் அரைக்கால் ரூபாய் இரண்டும் வெள்ளி நாணயமாகவும் நிக்கல் நாணயமாகவும் கிடைக்குமென்றும், ஒரு அணா நிக்கல் என்றும் அரையணா காலணா தம்பிடி இவை செம்பு நாணயமென்றும் பலரும் அறிவார்கள். செம்பு நாணயத்தில் செம்புமாத்திரமேயுண்டு. நிக்கல் நாணயத்தில் நிக்கல்மாத்திரம்தான். ஆனால் ரூபாய், அரை, கால் அரைக்கால் ரூபாய் வெள்ளி நாணயங்களில் வெள்ளி தவிர செம்பும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

### வேறு உலோகங்களைக் கலப்பானேன்?

சுத்தமான தங்கத்துக்கும் வெள்ளிக்கும் முத்திரை போட்டால் ஏற்றுக்கொள்ளக் கூடிய உறுதி கிடையாது. அவை மிகவும் வணக்கமுள்ள உலோகங்கள். நாணயங்களில் தலைப்பக்கம் பூப்பக்கம் இரண்டும் முத்திரை போடுவது போல் பலமாக அழுத்துவதனால் உண்டாகக் கூடியவை. மஞ்சள் மெழுகுபோல் மெதுவாக விருக்கும் உலோகங்களில் அழுத்தினாலும் முத்திரை விழாது. நாணயங்கள் வெள்ளியாலும் தங்கத்தினாலும் செய்யவும் வேண்டும். அவைகளில் முத்திரை பதியவும் வேண்டும். இதற்கு வெள்ளி தங்கங்களில் முத்திரைபோட அவசியமான உறுதியை அல்லது காடின்யத்தை (கெட்டி சுபாவத்தை) உண்டாக்கவேண்டும். வெள்ளி நாணயம் வெள்ளிக்கு உரித்தான வெண்மை நிறத்தையும் தங்க நாணயம் தங்கத்துக்குச் சொந்தமான மஞ்சள் (பசுமை) நிறத்தையும் உடையதாக விருக்கவேண்டும். இதற்குப் பல யுக்திகள் செய்யப்பட்டிருக்கவேண்டும். கடைசியாக இந்த உலோகங்களோடு செம்பைக் கலந்தால் கூடியவரை அந்த உலோகங்களின் சொந்த நிறம் இருந்து வருவதோடு அவைகளுக்குத் தனியாக இருக்கும்போது இல்லாத உறுதியும் உண்டாகின்றது. தனிவெள்ளிக்குக் கடின சுபாவம் வெகு குறைவாகும். தனிச் செம்பிற்கு வெள்ளியைவிட அதிகமான கெட்டிக் குணம் உண்டு. இவையிரண்டையும் கலந்து உருக்கினால் இவைகளின் அளவுக்குத் தக்கபடி கலப்படத்தின் உறுதி அதிகமாகவோ குறைந்தோ இருக்கும். எப்படி இருந்தாலும் கலப்படத்தின் உறுதி வெள்ளியினுடையதைவிட அதிகமாகவும் செம்பினுடையதைவிடக் குறைந்ததாகவுமிருக்கும். நிறமும் ஒரு முக்கியமான குணம். சில பழைய வெள்ளி நாணயங்கள் நாளாய் விட்ட காரணத்தால் ஒரு மாதிரி சிவப்பு நிறமுடையவைகளாக ஆகின்றன. இங்கிலாந்தில் ஷில்லிங் நாணயமும் இந்த மாதிரி ஆய்க்கொண்டிருந்தது. வெள்ளி நாணயம் சிவப்பாயிருந்தால் விகாரமாயிருக்கும். நாலு வருஷம் முன் வரையில் ஷில்லிங் நாணயத்தில் வெள்ளி பாதி, செம்பு பாதியாகவிருந்தது. இப்போது ஷில்லிங்கில் 100க்கு 50 வீதம் வெள்ளியும், செம்பு 40வீதமும் நிக்கல் ஐந்து, துத்தநாகம் ஐந்து வீதமும் சேர்க்கப்படுகின்றன. இப்படி இரண்டு உலோகங்களுக்குப் பதிலாக நான்கு உலோகங்கள் கலக்கப்படுகின்றன, அவைகளுள் நிக்கலுமொன்று. அதில் இவ்வளவு சேர்க்கவேண்டுமென்று கண்டு பிடிப்பது நாம் சொல்லிவிட்டதுபோல் அவ்வளவு சுலுவான வேலையல்ல. பல அளவு வெண்மையான உலோகங்களைச் சேர்த்து உருக்கி அந்த மிச்ரத்துக்கு, அதாவது கலப்பு உலோகத்துக்கு, முத்திரை போடத் தகுந்த கடின சுபாவமிருக்கிறதா வென்று பார்த்துப் பல தடவை பரீக்ஷித்து இந்த முடிவு பெறப்பட்டிருக்கிறது.



தெருக்களை சுத்தம் செய்யக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கும் ஒரு யந்திரம் பாரிஸ் நகரத்தில் பரீக்ஷித்துப் பார்க்கப்படுகிறது. இ. என். பி.

### நாணய மதிப்பு.

வெள்ளி தங்கத்துடனே அவைகளைவிட விலையில் மிகக் குறைந்த உலோகங்களை நாணயம் செய்வதற்காகச் சேர்க்க வேண்டியிருக்கிறபடியால் ஒரு ரூபாய் எடையுள்ள சுத்த வெள்ளி 9 அணா இருக்கலாம். ஆகையால் சுத்த வெள்ளிக்கும் ரூபாய்வெள்ளிக்கும் விலையில் வித்யாசமிருக்கிறது. ஒரு ரூபாய் என்று முத்திரை போட்ட நாணயத்தில் பாதி தான் வெள்ளியிருக்கிறது. ரூபாயில் முத்திரையில் காணப்படும் மதிப்புக்கும் அதிலுள்ள உலோகங்களின் விலைக்கும் வித்யாசமிருக்கிறது. இப்படியே தங்க நாணயத்தில் உள்ள உலோகங்களின் விலைக்கும் தங்க நாணயத்தின் மதிப்புக்கும் வித்யாசமுண்டு. நாணயத்தில் அச்சிட்டிருக்கும் மதிப்பு விலை அதிகமானது. ஒரு ரூபாயில் அரை ரூபாய் வெள்ளியும் கால் அணா விலை பிடித்த மற்ற உலோகங்களும் சேர்ந்து உலோகங்களின் விலை மாத்திரம் எட்டே காலணாவானால் பாக்கியாக ஒரு ரூபாய் மதிப்பிலுள்ள ஏழே முக்காலணாவும் கவர்ன்மெண்டைச்சேர்ந்தது. இந்த மாதிரி கிடைக்கும் வரும்படியிலிருந்து நாணயம் அச்சிடும் ஆபீஸ் சிப்பந்திகளுக்குச்சம்பளம் கொடுக்கவேண்டும். இங்கிலாந்தில் நிர்வாகச் செலவு 1925—26ல் மாத்திரம் 2,796,000 பவுன் ஆயிற்றாம். வருஷம் 1500 பவுன் பெறும் பெரிய உத்தியோகஸ்தரும் வருஷம் 300 முதல் 1000பவுன் வரை சம்பளமுள்ள மற்ற பத்து உத்தியோகஸ்தர்களும் இந்த ஆபீஸில் இருக்கிறார்கள். இது தவிர கீழ்த்தர சிப்பந்திகள் அநேகம். இந்தச் செலவெல்லாம்போக மிச்சம் கிடைக்கும்லாபத்தைக்கவர்ன்மெண்டார் தனி நிதியாக வைத்திருக்கிறார்கள். நாணயம் செய்யும் ஸ்தலம் இங்கிலாந்திலும் அதன்கிளைகள் ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா, கனடாவிலும் இருக்கின்றன. பம்பாயிலும் ஒரு கிளை 1917ல்ஸ்தாபிக்கப்பட்டது. அது இரண்டொரு வருஷம் வேலை செய்த பின் மூடப்பட்டுவிட்டது.

### ‘‘சேவிட்டு’’ ரூபாய்.

ரூபாயை ஒருவன் கையில் கொடுத்தால் அவன் அதை உடனே செல்லுமா செல்லாதா என்று சோதிக்கிறான். சிலர் கீழே போடுவதால் உண்டாகும் சப்தத்தாலும் வேறுசிலர் சுண்டுவதால் உண்டாகும் சப்தத்தாலும் கண்டு பிடிக்கிறார்கள். ரூபாய்க்குச் சாதாரணமாயிருக்கவேண்டிய ஓசையில்லாமல் கொஞ்சம் மந்தமான சப்தம் உண்டானால் அதைச் ‘செவிட்டு’ ரூபாய் என்கிறோம். இந்த மாதிரி சப்தக் குறைவினாலோ அல்லது தேய்ந்து போனதாலோ அல்லது

சிறுவர் கதை.

## இரும்புக் கோடரி பொன் கோடரியானது.

முன்னொரு காலத்தில் சந்தேசம் என்னும் கிராமத்தில் சித்தார்த்தி என்று ஒரு ஞானி இருந்தார். அவருக்கு ஒரு இரும்புக் கோடரியைத்தவிர வேறு சொத்து எதுவுமில்லை. ஒவ்வொரு நாளும் அவர் காட்டிற்குச் சென்று விறகுவெட்டி வந்து அதை விற்றுத் தம் மனைவியுடன் ஜீவனம் செய்து வந்தார். ஒரு நாள் அவர் வீட்டிற்கு ஒரு யோகி வந்தார். அப்போது சித்தார்த்தி வீட்டில் இல்லை. அவருடைய மனைவி மாத்திரமிருந்தாள். யோகி அவளை நோக்கி, அவளுடைய புருஷர் பெரிய ஞானியாக இருக்கையில் யதேஷ்டமாகச் சொத்து சம்பாதித்துக் கொண்டு சுகமாகவிருக்காமல் இப்படி ஏன் ஏழையாகக் கஷ்டப்பட வேண்டுமென்று கேட்டார். பிறகு அவ்வீட்டில் ஏதாவது சாமான் இருந்தால் அதைக்கொண்டு வந்து கொடுக்குமாறும் தாம் அதை தங்கமாகச் செய்து கொடுப்பதாயும் பிறகு அவர்கள் அதைக் கொண்டு கஷ்டப்படாமல் ஜீவிக்கலாமென்றும் யோகி கூறினார். ஞானியின் மனைவி, வீட்டில் இரும்புக் கோடரியைத் தவிர வேறொன்றும் இல்லையென்று கூறி அதைக் கொண்டுவந்து கொடுத்தாள். யோகி அந்தக் கோடரியைப் புடம்போட்டு இரும்பைத் தங்கமாக மாற்றி ஞானியின் மனைவியிடம் கொடுத்துவிட்டுச் சென்றார்.



அவர்போய்ச் சிறிது நேரத்திற்கெல்லாம் சித்தார்த்தி வீட்டிற்குத் திரும்பிவந்தார். உடனே அவர்மனைவி அவரிடம் தங்கக் கோடரியைக் காட்டினாள். ஞானி அது ஏதென்று கேட்கவே, மனைவி, ஒரு பெரியவர் வந்து அவர்களுடைய ஏழ்மைத்தனத்தைப் பார்த்துவிட்டு இப்படி இரும்பைத் தங்கமாக மாற்றிக் கொடுத்ததாகக் கூறினாள். உடனே ஞானி அந்தப் பெரியவர் சென்ற வழியை விசாரித்துக்கொண்டு ஓடி அவரைத் தேடிப்பிடித்து வீட்டிற்கு அழைத்தார். வீட்டிற்கு



வந்த பிறகு தங்கக் கோடரியைக் கொண்டுவந்து அவரிடம் கொடுத்து "எனக்கு முன்போல் இரும்புக் கோடரியே வேண்டும், தங்கக்கோடரி வேண்டாம், அதை மீண்டும் மாற்றிக்கொடுங்கள்" என்று வற்புறுத்தினார். அதற்கு யோகி "என்னால் இரும்பைத் தங்கமாக்க முடியுமே ஒழியத் தங்கத்தை இரும்பாக்க முடியாது. தங்கக் கோடரியை விற்று ஆயிரம் இரும்புக்கோடரி வாங்கிக் கொள்ளலாமே. மேலும் உங்கள் ஆயுள் முழுவதும் இதை வைத்துக்கொண்டு கஷ்டப்படாமல் ஜீவிக்கலாமே" என்று கூறினார். சித்தார்த்தி தனக்குத் தன் பழய இரும்புக் கோடரியே வேண்டுமென்று பிடிவாதம் செய்தார். கடைசியில் யோகியால் முடியாமற்போகவே தாமே தமது சக்தியால் தங்கக் கோடரியை மீண்டும் இரும்பாக மாற்றினார்.



அவர் யோகியை நோக்கி, சொத்தைப் பெற வழி தெரியாமல் தாம் சும்மாவிருந்துவிடவில்லையென்றும் ஒவ்வொருவரும் அவரவர் கர்மபலனை யனுபவிக்கவேண்டுமென்றும், அதை அனுபவிக்காமல் வேறு முயற்சியெடுத்துக்கொண்டால் அதற்காக இன்னொரு ஜென்மமெடுக்க வேண்டுமென்றும் அந்தந்த ஜென்மத்தில் ஒவ்வொருவரும் செய்யும் கர்மாக்களுக்கேற்றபடியே அடுத்த பிறப்பில் பலனேற்படுவதாயும் கூறினார். பிறகு யோகியும் அதன் உண்மையை ஒப்புக்கொண்டு சென்றார்.

---

சரியான நாணயமில்லாமல் ஈயரூபாயாக விருப்பதனாலோ பிறர் இதை வாங்கிக்கொள்ளாமலிருந்தால் இது 'செல்லாது' என்கிறோம். இங்கிலாந்தில் பவுன் 24 வருஷத்திலும், அரைப்பவுன் 15 வருஷத்திலும் வெள்ளி நாணயங்களான அரை கிரௌன் (2½ஷி.) 66 வருஷத்திலும், ஷில்லிங் 41 வருஷத்திலும் அரைஷில்லிங் 28வருஷத்திலும் கால்ஷில்லிங் 32 வருஷத்திலும் கையாடுவதனால் தேய்ந்து போகின்றன. அதிகமாகக் கைமாறும் நாணயம் சீக்கிரம் தேயும். தேய்ந்துபோன ரூபாய் போன்ற நாணயங்களைக் கவர்ன்மெண்டார் திரும்பப் பெற்றுக்கொண்டு புதிய நாணயத்தை வெளியிடுவார்கள். நாணயம் செய்யுமிடத்தில் அதற்குச் சரியான சப்தம் இருக்கிறதாவென்று பரீக்ஷிக்கச்சமீபகாலம்வரையில் சிறிய பையன்களை அமர்த்தியிருந்தார்கள். ஒவ்வொரு பவுனையும் ரூபாய் முதலான நாணயத்தையும் சப்தத்தால் பரீக்ஷித்து இவர்கள் கெட்ட நாணயத்தைப் பொறுக்கித் தள்ளிவிடுவார்கள். இந்தப் பையன்கள் படிக்கப் போகமுடியாமல் நின்று விடுகிறார்கள். இப்போது செவிட்டு ரூபாயைத் தள்ளிவிட இயந்திரம் கண்டுபிடித்திருக்கிறார்கள். பெருந்தொகை ரூபாய் கணக்கிட வேண்டிவந்தால் அதை நிறுப்பது வழக்கம். அன்னிய தேச நாணயங்கள்கூடப் பல சமயங்களில் இங்கிலாந்தில் "ராயல் மிண்டில்" அச்சடிக்கப்படுகின்றன.

---

## நவநாகரீகக் குறிப்புகள்.

(884-ம் பக்கம் தொடர்ச்சி.)

### வெந்நீர் மெஷீன்.

நவநாகரீக வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள சௌகரியங்களில் ஒன்று வெந்நீர்மெஷீன். முதலில் நாற்பது ரூபாய்கள், ஐம்பது ரூபாய்கள் என்று கொடுத்தால் என்ன? இது நன்றாக உழைக்குமே? விறகும் அதிகம் செல்லாது. வெந்நீரும் சீக்கிரத்தில் காய்ந்துவிடும். எங்கள் வீட்டில் நடுத்தர வெந்நீர் 'மெஷீன்' ஒன்று இருக்கிறது. விலை நாற்பது ரூபாய்கள் ஆச்சுது என்று நினைவு. எவ்வளவு சௌகரியம் தெரியுமா? கீழே அதன் குழாய் அடியில் பாத்திரத்தை வைத்துக் குழாயைத் திறந்தால் வெந்நீர் விழுந்து விடுகிறது. சொம்பை விட்டு விட்டு மொள்ளுகிற சிரமம் இல்லை. கையிலும் ஆவி அடிக்காது. கரி, விறகு, எருமுட்டை எதை வேண்டுமானாலும் உபயோகப்படுத்தலாம். ஒரு தரம் விறகோ அல்லது கரியோ எரிந்து தணல் விழுந்த பிறகு எரு முட்டை, மெதுவான 'கோக்' முதலியவற்றைப் போட்டு விட்டால் வெகுநேரம் வரையில் வெந்நீர் சூடாகவே இருக்கும். 'கோக்' என்பது ஒரு தினுசு நிலக்கரி. இதைக் கரி மூட்டைகள் போலவே மூட்டைகளாக விற்கிறார்கள். விலையும் சுமாராகக் கரியின் விலைதான் ஆகிறது. இது சீக்கிரத்தில் நீத்து விடாமல் அதிக நேரம் உஷ்ணமாகவே இருக்கிறது. வெந்நீர் மெஷீன்களில் கரியுடன் கலந்து உபயோகிக்க ஏற்றது.

### பெட்ரோலும் வைரமும்.

'பெட்ரோல்' போட்டுச்சுத்தம் செய்வதால் வைரம் கருத்து விடும் என்பது தவறுதலான அபிப்பிராயம். வைரம் உலகத்திலுள்ள மிகவும் கடினமான வஸ்துக்களில் ஒன்று; அது பெட்ரோலுக்கு எல்லாம் அசையாது. வைரநகைகளைச் சுத்தி செய்யப் பெட்ரோலைத் தாராளமாக உபயோகிக்கலாம். ஏன், அன்று லேடி சின்னையாவும் நானுமாக ஒரு பிரபல வைர வியாபாரியிடம் சென்றிருந்தோம். தன் பேத்தி காதில் போட்டிருந்த வைர லோலாக்கைப் பிரித்துப் புது தினுசில் கட்டவேண்டும் என்று லேடி சின்னையா சொன்னாள். எனக்கும் ஒரு மோதிரம் கட்டவேண்டி இருந்தது. அந்த வியாபாரி, லோலாக்கிலிருந்த வைரங்களைப்பெயர்த்துஎடுத்து 'குழந்தை காதில் எப்போதும்போட்டிருந்தீர்களோ, எண்ணெய் இறங்கி இருக்கிறது' என்று சொல்லிவிட்டு, அருகில் ஒரு சீசாவில் தயாராக வைத்திருந்த 'பெட்ரோலில்' வைரங்களைச் சிறிது நேரம் ஊற வைத்துப் பிறகு துடைத்து எடுத்துக் காட்டினான். நாங்கள் 'பெட்ரோலில்' போட்டால் வைரம் கெடாதா என்றதற்கு, 'வைரம் கெடுவானேன்? ஆஸிட்டில் போட்டால்கூடக் கெடாது. ஆனால் அப்படிச் சுத்தம் செய்தால் பிறகு நாம் ஜாக்கிரதையாகவே துடைக்க வேண்டும், வைரத்தைச் சுத்தி செய்ய ஒன்று பெட்ரோல் போடலாம். அல்லது சோடாமாவைக் கரைத்து அதில் போட்டுக் கொதிக்க வைக்கலாம். இதனால் எல்லாம் வைரத்துக்கு ஒரு கெடுதலும் உண்டாகாது, என்றான். ஆனதினால் நீ நிர்ச்சிந்தனையாக வைர நகைகளைப் பெட்ரோலினால் சுத்தம் செய்யலாம்.



# நோயற்ற வாழ்வு



## புண்களும் பூதிஹர சிகித்ஸையும்.

(ஆயுர்வேத பூஷண பண்டித எம். துரைசாமி அய்யங்கார் எழுதியது.)

புண்கள் என்பதால் சொறி, சிரங்கு முதலிய சர்மரோகங்களைப்பற்றி இங்கே நான் குறிக்கவில்லை. சாஸ்த்ரீய பரிபாஷைகளைப் பிரயோகிக்காமல் ஸர்வ ஸாதாரணமாக வழங்கப்படும் புண் என்னும் சொல்லை உபயோகிக்கிறேன். அடி முதலியது தாக்குவதால் உண்டாகும் புண்ணைப்பற்றி இங்கு முக்கியமாகக் கூறுகிறேன்.

நடக்கும்போது காலில் அடி தாக்கினாலும், கத்தி முதலியதால் அறுபட்டாலும், வேறு பலவகைக் காரணங்களாலும் நமது சர்மம் சிதைவடைந்து, சில ஸமயம் தசைநாரும் சிதைவுபட்டு விரணம் ஏற்படுகின்றது. இப்படி ஏதேனும் காரணத்தால் புண் ஏற்படும்போது புண் கடுமையாயில்லாமல், தேஹவலிமை சரியாயிருந்து, இயற்கை நிலைமையும் அவன் தேகத்துக்கு அனுகூலமாயிருந்தால் அந்தப் புண் கிரமமாகத் தானே ஆறிவிடும்.

அதைக் கொண்டே எல்லோருக்குமே எந்த நிலைமையிலுமே அப்படி விரணம் ஸௌக்கியமாய் விடாது. பூதிஹாமான சிகித்ஸை எந்தப் புண்ணுக்கும் உடனே செய்ய வேண்டிய உயர்ந்த பரிஹாரம். (பூதிஹாம் என்பது ஒரு பெரிய பரிபாஷையாகத் தோன்றும். பூதி என்றால் சீழ்ப்பிடித்தல், அந்த நிலைமையைத் தடுத்தல் அல்லது பரிஹரித்தல் பூதிஹாம் என்று கூறப்படுகிறது. இது ஸம்பந்தமான பிரமாணங்களை இங்கு விவரிக்கப் போவதில்லை.)

ஓரளவு உஷ்ணமும், வாயுவும், ஈரமும் சேர்ந்து புண்பட்ட இடத்தில் கொதிப்பையுண்டு பண்ணி சீழுண்டாக்கும். ஆயுர்வேத வியவஹாரப்படி உஷ்ணம், வாயு, ஈரம் ஆகிய மூன்றும் முறையே பித்தம், வாதம், கபம் என்று வழங்கப்படும். "ஆகந்துகே வ்ரணே காலாதசுத்தே தோஷஸஞ்சய: த்ரயாணாம் ஜாயதே தஸ்மாத் தத்ரபூய: ப்ரவர்த்ததே" என்கிறபடி அடி தாக்கியுண்டான புண்ணைச் சுத்தம் செய்யாது உபேக்ஷித்தால் முற்கூறிய வகையில் வாத—பித்த—கபங்கள் என்னும் மூன்று தோஷங்களும் ஒருமிக்கக் கோளாறடைந்து அதில் சீழை உண்டு பண்ணும் என்கிற விஷயத்தை அனைவரும் நினைவில் வைக்க வேண்டும். இந்தத் தத்துவம் இக்காலத்திய மேனாட்டு நிபுணர் கண்டறிந்த புதிய விஷயமல்ல; ஆனால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் ஆயுர்வேதம் இயற்றியவருக்குத் தெரிந்திருந்த உண்மை. முற் குறிப்பிட்ட உஷ்ணம், வாயு ஈரம் இவற்றுள் மூன்றுமோ அல்லது இரண்டொன்றோ புண்மீது ஸம்பந்தப்படாமல் செய்தால் சீழ்ப்பிடித்தலுக்குத் தடையேற்படும்; "வ்ரண ஸ்த்தானே தோஷ கோபஸ் ஸ்யாச்சேத் யத்நேந வாரித: ஸர்வஸ்யாங்யதாஸ்யா பிபூதிதோஷோ நஜாயதே" என்கிற ஸுச்ருத ஸம்ஹிதையின் ச்லோகம் அதே விஷயத்தை விளக்குகின்றது.



சென்னை ஸர்வகலாசாலைப் பட்டமளிப்புவிழா சென்ற வாரம்நடந்தது. அத்தியக்ஷகரான கவர்னர் நடுவில் நிற்கிறார். உபஅத்தியக்ஷகர், கல்விமந்திரி, ரிஜிஸ்டிரார், கல்வியிலாகா டைரெக்டர் முதலியவர்களும் படத்தில் காணப்படுகின்றனர். பி பி பி

காலில் அடிதாக்குவதால் ஏற்படும் புண்ணிலும், வேறு காரணங்களால் இரத்தம் கசியும் விரணங்களிலும் புழுதியையாவது சாம்பலையாவது பலர் மேலே இரத்தக்கசிவைத்தடுப்பதற்காகத் தூவுவதை நாம் பார்த்திருக்கிறோம். மண் அல்லது சாம்பல் விரணத்தில் அதிக உறுத்தலையும் நோவையும் சுயம் உண்டு பண்ணுவதோடு, அவற்றில் அடங்கிய பலவித தோஷங்கள் அல்லது நுண்ணுயிர்களும் விரணத்தில் விசேஷ விகாரங்களை விளைவிக்கக் கூடுமாகையால் தோன்றியவாறு மண் முதலியதைப் புண்களில் போடுவது விவேகமான காரியமல்ல.

விரணம் ஏற்பட்டதும் அதைச் சுத்தமாகப் பாதுகாக்கவும், அதை ஆற்றிச் சுகப்படுத்தவும் உபயோகமான சில சரக்குகள் உண்டு. அவற்றைச் சம்பாதிக்கப் பணச் செலவும் அதிகம் கிடையாது. "ஸத்யோவ்ரணே தோஷபவே வ்ரணே வா ரக்தஸ்ருதௌ வா ரஹிதேஸ்ருஜாவா, க்ருதம் ஹி ஸங்க்ஷாளிதமாவிஜேந ரோம்ணாச துத்தம் ஸ்ப்படிகீ சயோஜ்யா, சூர்ணஞ்ச பப்பூலத ரோஸ் த்வசஸ்ததா ஸூக்ஷ்மம் ஹிதம் கோகிலஜஞ்ச சூர்ணம்"— அடி முதலியது தாக்கித் திடீரென்றுண்டாகும் புண் ஸத்யோவிரணம் எனப்படும்; கட்டிகள் முதலியவை கிளம்பி உடைந்து ஏற்படும் புண்களை தோஷஜவிரணங்கள் என்போம்; இவ்விருவிதமான புண்களிலும் இரத்தம் வடிந்தால் அதை நிறுத்தவும், இரத்தக் கசிவு இல்லாதிருக்கையில் அந்த விரணங்களை ஆற்றிச் சுகப்படுத்தவும் அடியில் வரும் பதார்த்தங்கள் உபயோகமானவை:—கஷாயாதிகளில் சேர்த்து அலம்பிப் பக்குவம் செய்யப்பட்ட நெய்; இதை சததௌத க்ருதம் என்போம். சததௌதபக்ருதம்விரணங்களைச் சௌக்கியப்படுத்துவதற்கு அதிக உபயோகமான சரக்கு. இதைப் புண்மேல் தடவி, ஆட்டு ரோமங்களை மேலே கனமாக வைத்துக் கட்டிவிடுவது மிகவும் நலம். அல்லது மயில்துத்தம் பொடியைப் புண்மேல் சிறிதளவு தூவிக் கட்டினால் சீழ் சுத்தமாய் மீண்டும் அதில் சீழ் ஏற்படாது. இரத்தக் கசிவை நிறுத்தவும், விரணத்தை ஆற்றவும் படிக்காரத் தூளை அதன்மேல் தூவலாம். கருவேல மரப்பட்டையை உலர்த்தி, இடித்துச் சூர்ணம் செய்து வைத்துக்கொண்டாலும் புண்களின் மேல் இரத்தக் கசிவு முதலியதைப் பரிஹரிப்பதற்கு உபயோகிக்கலாம். சுத்தமான அடுப்புக் கரியை மிருதுவாகப் பொடி செய்தும் விரணங்களின்மேல் தூவி, முன்போல் ஆட்டு ரோமங்களைப் பரப்பிக் கட்டினாலும் இரத்தப் பெருக்கும் நின்று கிரமமாகப் புண்களும் ஆறிவிடும். இது மேலே எடுத்து உதஹரித்த ஸ்லோகங்களின் பொருள்.

இவற்றுள் கரிப்பொடி மிகவும் சிறந்த பூதிஹரமான சரக்கு. மற்றவைகளைவிடச் சுலபமாக எங்கும் எப்பொழுதும் கிடைக்கக் கூடிய வஸ்து. முதலிற்கூறிய சததௌத க்ருதம் என்கிற நெய்ச் சரக்கு அப்படியே அதிகப் பிரயோஜனமுள்ள உயர்ந்த ஔஷதமானாலும் அதைப் பக்குவம் செய்கிற வேலை ஒன்றுண்டு. அது அனைவருக்கும் எளிதல்ல. ஆனால் இந்தக் கிருதம் விரணங்களை ஆற்றுவதற்கு மாத்திரமல்ல, அவற்றில் ஏற்படும் அழற்சியையும் தணியச் செய்வதில் பெயர்போனது. "ஸைந்தவம் லவணஞ் சாபீ வ்ரணம் சோதயதித்ருவம்"— இந்துப்பு என்கிற ஒருவித உப்பும் புண்ணைச் சுத்தம் செய்வதிற் சிறந்த சரக்கு. காயம் பட்டவுடனே யாவது, புண் அசுத்தமாயிருக்கும் போதாவது மேற்படி உப்பைச் சுத்தமான ஜலத்திற் கரைத்து வடிக்கட்டி, அந்த கபத்தைக் கொண்டு அந்தப் புண்ணைக் கழுவி விட்டால், இரத்தக்கசிவும் நின்றுவிடும், புண்ணும் சுத்தமாகும்.

த்விவ்ரணீயாத்யாயத்தில் ஸுச்ருதர் "ப்ரக்ஷாளநே சாபி ஸதா வ்ரணஸ்ய யோஜ்யம் மஹத்யத் கலு பஞ்சமூலம்" என்று, புண்ணைக் கழுவி சுத்தமாய் வைப்பதற்கு மஹாபஞ்சமூலச் சரக்குகளை உபயோகி

க்கலாம் என்கிருர். [பில்வம், குமுழன், பெருவாகை,பாதிரி, சிறுவழுதுணை ஆக இவ்வைந்து மரங்களின் வேர்களுக்கு மஹா பஞ்சமூலங்கள் என்று பெயர்.] மஹா பஞ்சமூலச் சுக்குகள் விரணங்களைச் சுத்தம் செய்ய வெகு உபயோகமாயிருப்பதோடு, விரணங்களை எளிதில் ஆற்றக்கூடிய குணமும் உள்ளவை. இச்சரக்குகளைச் சேகரித்து நுண்ணிய சூர்ணமாகச் செய்து விரணங்களின் மேல் தூவுவதற்கும் உபயோகிப்பதுண்டு; அல்லது இவற்றின் கஷாயத்தைக் கொண்டு புண்களை கழுவிக் கட்டுவது முண்டு.

அஷ்டாங்க ஹ்ருதயாதிகளில் வேறு பல முறைகளும் விரண சோதநத்திற்காகவும், விரண ரோபணத்திற்காகவும் (ரோபணம்—ஆற்றுதல்) பிரயோகிக்கப் பட்டிருக்கின்றன. அவை யெல்லாம் வெகு சிறந்த முறைகளாயினும் வைத்தியரல்லாதார் தயார் செய்து உபயோகிக்கக் கூடியவாறு எளிய முறைகளல்ல.

விரணம் உண்டான இடத்தை மிகக் குளிர்ச்சியான வஸ்துவை மேலே பிரயோகித்துக் காப்பாற்றினல் சீழ்க் கொள்வதில்லை. "யதோக்தைச் சீதவளா த்ரவ்யை க்ஷீரபிஷ்டைர் க்ருதப்லுதை: திஹ்யா தபஹ லாங் லேபாங் ஸுசீதாம்ச் சாவசாரயேத்"—மிகக் குளிர்ச்சி பொருந்திய வஸ்துக்களைப் பாலிலாவது நெய்யிலாவது கலந்து விரணத்தின் மேல் அதிக கனமில்லாமல் தடவலாம். மேலும் மிகக் குளிர்ந்த வஸ்துவை மேலே வைத்திருக்கலாம்," என்று ஸுச்ருதர் கூறுகிருர். மிகவும் குளிர்ச்சியான நிலைமையில் விரணத்தைக் காப்பாற்றினுல் அது சீழ்க் கொள்வதில்லையென்று ஸுச்ருதமுறை விளக்குகிறது. விரணத்தின்மேல் பனிக்கட்டியை வைத்தால் அந்தப்புண் சீழ்ப் பிடிக்காமல் சுத்தமாயிருக்குமென்கிற மேனுட்டு வைத்திய முறையும் இக்கொள்கையைத் தான் குறிப்பிடுகின்றது.

எவ்விதமான விரணம் ஏற்பட்டபோதிலும், அதைச் சுத்தமாக வைத்துக் கொள்ளவும், கூடியவரையிலும் தாமே அவரவர் சுகப்படுத்திக் கொள்ளவும் இச்சிறு நிரூபம் அவசியமான உபாயங்களைக் குறிப்பிடுகின்றது. முற்கூறிய வகையிலேயே வேறு சிலமுறைகளைக் கொண்டு "க்ருமிக் நச்ச விதி:" என்று கிருமிகளைப் போக்கும் சிகித்ஸையும் செய்யப்படும். இதைப்பற்றி அவசியமானல் மற்ருெரு நிரூபத்தில் எழுதுகிறேன்.

விரணத்தைச் சுத்தம் செய்தபிறகு முற்குறிப்பிட்ட சததௌத க்ருதம் முதலியதைப் பிரயோகித்து, ரோமம் அல்லது பஞ்சு முதலியதை வைத்து, மேலே பந்தநம் இடவேண்டும். "அப்படிச் செய்வதால் ஈ முதலியவை மொய்க்காமலும், அழுக்குகள் சேராமலும் இருப்பதோடு, விரணத்தில் ஆற்றும் மருந்து நன்கு தங்கியிருந்து அது சீக்கிரமாகவும் சுகமடையும்" என்று வாக்படர் கூறுகிருர்.

# அனுபவ விநோதங்கள்

(ஸ்ரீமான் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு எழுதியது.)

ஆசிரியரின் பெயர்:—பத்திரிகைகளில் ஆசிரியரின் பெயர் வெளிவருவதில் கீர்த்தி ஏற்படுவது உணமையே. ஆயினும் பத்திரிகையின் சொந்தக்காரர் பலமாதக் கணக்கில் சம்பளத்தைப் பாக்கிவைத்துக்கொள்ளும்போதும், காலத்தில் சம்பளம் தராதபோதும், யதார்த்தமாய் நடவாதபோதும் பத்திரிகையிலிருந்து அவர்விலகிக்கொள்ள-தன்பெயர்பத்திரிகையில் வெளிவருதல்-முடிவதில்லை. வெளியிலுள்ளோர் ஆசிரியர் சம்பளமே கிடைக்காமல் படுங்கஷ்டங்களையுணராமல், எதற்காகவோ விலகியதாக எண்ணி விடுவர். இதுவரை வெளிவந்த தன் பெயர் போய் விடுகிறதே என்று சம்பளம் வாராவிடினும் வேலை செய்யும்படி நேர்கிறது. ஆதிமுதற்கொண்டு தன் பெயர் ஆசிரியர் என்ற வகையில் பத்திரிகையில் வாராதிருந்தாலோ எந்தச் சிரமமுமின்றி நினைத்தபோது விலகிவிடலாம்.இந்தச் சுகம் ஆசிரியரின் பெயர் பத்திரிகையில் வெளிவருவதில் இல்லை.

அதை மறைத்துவிடு:— தன் பலஹீனம், தனது கடன், தனதுசொத்து, தன்ஜாதகம், தன்முக்கிய நண்பன் தன்னைக் கைவிட்டு விட்ட சங்கதி, தனது தத்தளிப்பான நிலை, தன்வறுமை, தான் இனிச் செய்யவிருக்கும் வேலைகள், தன்மனைவி மக்களின் மனப் போக்குகள், தான் பகைத்துள்ள மனிதர்களின் பெயர், தன்னைக் கேவலப்படுத்தியவர்களின் பெயர் இவற்றைவெளியிடவொண்ணுது. வெளிவாரதவரையில் தான் உலக மதிப்பு.

கடன் படுதல்:—உண்மையிலேயே ஏழ்மையாகி நகைகளை அடகு வைத்துக் கடன் வாங்குவோர் சிலர். பாங்கியில் தன் பெயருக்கு வேண்டிய பணமிருந்தும், மற்றும் பல வழிகளில் பணம் வர வேண்டியதிருந்தும், அவற்றை வெளியிடாமல் ஏழ்மையிருப்பது போன்று நடிக்கவும், மேற்சொன்ன பாங்கியில் கைவைக்க மனம் வாராமலும் நகைகளையடகு வைத்துப் பணம் பெறுவோர் சிலர். 'வெகு கடன்பட்டுவிட்டான்!' என்று ஊரார் கூற, உள்ளுக்கோ ஆயிரம் ரூபாய் கடனும், இருபதாயிரம் ரூபாய் சொத்தும் இருக்கிறது. இந்த ரகசியத்தை வீட்டுத் தலைவன் வெளியிடுவதில்லை. ஏழைபோல் நடிக்கிருன்.

பத்திராசிரியரின் நட்பு:—பத்திராசிரியரின் ஓய்வு நேரம் கண்டு அவருடன் பேச நேர்கிறது. வேலை சமயங்களில் காணச்சென்ருல் அவர் விரும்புவதில்லை. அவர் ஏழ்மையிலிருப்பினும் அவரது சொல்லும், மனமும் தைரியமும், கம்பீரமானதாய், எத்தகையோருக்கும் அஞ்சாதிருக்கின்றன. எத்துணை தனவந்தராயினும் அவர்களை ஒரு பொருட்டாக மதிப்பதில்லை. எவ்வளவு ஏழையாயினுங்கூட அளவு மிகுந்தோரை ஆவலுடன் வரவேற்று மதிக்கிருர். இந்த மதிப்பு ஒரு செல்வவானிடம் வைப்பதில்லை. அவரது பேனுவின் முனை எந்த ஈட்டிக்கும் துப்பாக்கிக்கும் அஞ்சுவதில்லை. பத்திராசிரியரும் நூலாசிரியரும் மிக்க நல்லவர்கள்தான். எனினும், தங்களின் நண்பன் என்பதைக் கூட எண்ணுமல் அவர்களைப் பற்றிக் கூடச் சந்தர்ப்பம் கிடைத்தால் பத்திரிகையிலும், தமது நூலிலும் பச்சை பச்சையாய் எழுதிவிடுவார்கள். தங்கள் கைக்குக் கிடைத்த சரக்கு ஸ்வாரஸ்யமாயிருப்பின்—அது ஒரு நண்பனின் சொந்த விஷயம்—என்று எண்ணிப்பாராமலே வெளியிட்டுவிடுகிருர்கள். ஆசிரியர்களின் பேனுவுக்கு எப்பொழுதும் அஞ்சி நடக்க நேர்கிறது. நட்புக்கொள்வதும் வெகு கஷ்டமாயிருக்கிறது. ஆயினும் ஆசிரியர்கள் எல்லாக் காலங்களிலும் அன்புக்கு அடிமைப் பட்டவர்கள் என்பதையும், அன்பினுல் எதையும் செய்து தர இணங்குவரென்பதையும் ஒப்புக்கொள்ளவேண்டும்.

அனுபவமில்லை:—சிலர் தம் வாய் சமர்த்தால் ஏதோ மிகவும் தேறினவர்கள் போல் காண்பித்து எந்தக் காரியத்தையும் சாதிக்கப் பார்க்கின்றனரேயன்றி மற்றபடி அவர்களுக்கு அனுபவமேயில்லை. அதை வெளியில் காண்பித்துக் கொள்வதுமில்லை. எல்லாம் தெரிந்தவர்கள் போல் நடிப்பு.